# பதிப்பாசிரியரிடமிருந்து...

அன்பார்ந்த ஜெப நண்பர்களுக்கு,

கடந்த வருடம் சுமார் 1 மில்லியன் கிறிஸ்தவர்கள் உலக முழுவதிலும் ரமளான் மாதத்தில் 30 நாட்கள் ஜெப வழிகாட்டியை பயன்படுத்தியுள்ளார்கள். 30 நாட்கள் ஆரம்பமானவுடன் இந்த சிறிய ஒரு குழு தேவனின் அன்பான கண்களினால் அவர் முஸ்லீம் உலகுக்கு செய்துகொண்டிருக்கும் காரியங்களை காண்கின்றனர். 30 நாட்கள் ஜெபத்தினால் தாங்கள் முஸ்லீம் உலகை பார்க்கும் விதத்தில் தேவன் ஏற்படுத்திய மாற்றத்தையும் அவர்களுக்கு உதவி செய்வதற்காக மாற்றமடைந்த தங்கள் சுபாவத்தையும் அநேகர் எம்முடன் பகிர்வதால் நாம் மிகவும் உட்சாகம் அடைகிறோம். முஸ்லீம்கள் அனைவரையும் இஸ்லாமிய தீவிரவாதிகளாக கருதும் மனப்பான்மையைவிட்டும் எம்மை மாற்றுகிறது. ஆகவே இந்த பதிப்பை நம்மை இணைக்கின்ற ஒரே வழி அல்லது குடும்பம் என்ற தலைப்பில் குடும்ப வாழ்க்கைக்கான ஜெபங்களுடன் எழுதுகிறோம் - எமது விசுவாசம் துளிர்விட்ட இடம், எமது செயற்பாடுகள் பிரதிபலிப்புகளை எங்கே கண்டுபிடித்தோம், அதற்கூடாக நீங்கள் முஸ்லீம்களின் குடும்ப கட்டுப்பாடுகளையும் கலாச்சார தடைகளையும் அறிந்துகொள்வதோடு இருசாராருக்கும் பொதுவாக உள்ள காரியங்களையும் அறிந்துகொள்வீர்கள். இவை இரண்டையும் அறிந்துகொண்ட உங்கள் ஜெபத்துக்கு பின்வரும் இறைவார்த்தையும் உதவியாக அமையும்.
1யோவான் 3:1

*"நாம் தேவனுடைய பிள்ளைகளென்று அழைக்கப்படுவதினாலே பிதாவானவர் நமக்குப் பாராட்டின அன்பு எவ்வளவு பெரிதென்று பாருங்கள்;"*

உங்கள் ஜெபத்துக்காக நன்றி,

பதிப்பாசிரியர், 30 நாள் சர்வதேசம்

*உலகம் முழுவதிலும் சுமார் 1 மில்லியன் கிறிஸ்தவர்கள் 30 நாள் ஜெப கையேட்டை பயன்படுத்தி ஜெபிக்கிறார்கள்.*



# உங்களை வரவேற்கிறோம்

நீங்கள் 30 நாட்கள் முஸ்லீம்களுக்கான ஜெபத்தில் முதல்முறையாக பங்குபற்றுகிறீர்களா? அல்லது 1993ம் ஆண்டு நாங்கள் இந்த ஜெபத்தை ஆரம்பித்ததிலிருந்து நீங்கள் ஜெபிக்கிறீர்களா? அல்லது புதிய ஒரு மொழியில் மொழியாக்கம் செய்யப்பட்ட ஜெப வழிகாட்டியை பயன்படுத்துகிறீர்களா? தற்பொழுது 30 மொழிகளில் உலகெங்கிலும் 30 நாள் ஜெப கையேடு மொழியாக்கம் செய்யப்பட்டு பயன்படுத்தப்படுகிறது – சில பிரசித்திபெற்ற மொழிகள் மற்றும் சில மிகவும் குறைவாக பயன்படுத்தப்படும் மொழிகள். உங்கள் அனைவரையும் ஒன்றினைத்து உங்கள் ஜெபத்துக்கூடாக முஸ்லீம் உலகுக்கு ஆசீர்வாதத்தை கொண்டுவருவதே நோக்கமாகும். இந்த ஜெப கையேட்டின் நோக்கம் கிறிஸ்துவை பின்பற்றுகிறவர்கள் முஸ்லீம் உலகின் நிலைமையையும், முஸ்லீம் குடும்பங்களின் தேவைகளையும் புரிந்துகொள்ளவேண்டும் என்பதேயாகும். அது உங்களை தெளிவான வழிப்புணர்வுடன் தேவன் முஸ்லீம் உலகை நேசிக்கும் விதத்தை அறிந்துகொண்டு உங்கள் உள்ளத்திலிருந்து ஜெபிக்க உதவும்.

உலகமானது மிகவும் பிரச்சினைகளும் முரண்பாடுகளும் நிறைந்ததாகும். சமாதானத்தை கொண்டுவரவும் சமுதாயங்களை மாற்றவும், தேவ ராஜ்யத்தை பூமிக்குக்குக் கொண்டுவருவதற்கும் ஜெபத்தால் மாத்திரமே முடியும் என்று நாங்கள் உறுதியாக நம்புகிறோம். இவ்வருட 30 நாட்களும் குறிப்பாக குடும்பங்களுக்காகவே ஜெபிக்கிறோம். உலகெங்கும் இருக்கிற எமது எழுத்தாளர்கள் அவர்கள் வாழ்கிற கலாச்சாரம் மற்றும் முஸ்லீம் கலாச்சாரங்களிலிருந்து அநேக குடும்ப சம்பவங்களையும் தேவைகளையும் கரிசனைகளையும் பகிர்ந்துகொள்கிறார்கள். எல்லா குடும்பங்களும் வித்தியாசமானவர்கள், ஆனால் நீங்கள் அவற்றை வாசித்து பொதுவான காரியங்களை சிந்தித்து கண்டுபிடிப்பீர்கள் என்று நினைக்கிறோம்.







# நாம் எங்கே ஜெபிக்கிறோம்

வரைப்படத்திலுள்ள இலக்கங்கள் பல கட்டுரைகளின் பக்க இலக்கங்களை காண்பிக்கின்றது.



# முஸ்லீம் குடும்பங்களுக்காக ஜெபிப்போம்

குடும்பம் என்பது மிகவும் சிக்கல் நிறைந்த ஒன்றாகும். எமது குடும்ப வாழ்க்கை நாங்கள் யார் என்பதிலும் இன்னும் பல காரணிகளினாலும் தீர்மானிக்கப்படுகிறது. ஒரே மாதிரியான குடும்பங்கள் இல்லை. இஸ்லாமிய குடும்பங்களை அவதானிக்கும்போது, ஒற்றுமைகளையும் வேற்றுமைகளையும் கண்டுகொள்ளலாம்.

இந்தப் பதிப்பில் முஸ்லீம் குடும்பங்களிலுள்ள பன்முகத்தன்மையை ஆராயவுள்ளோம். கிறிஸ்தவ குடும்பங்களைப்போல கலாச்சாரம், பாரம்பரியம், கல்வி, அனுபவம் மற்றும் சந்தர்ப்பம் என்பன உலகெங்கிலும் இருக்கும் இஸ்லாமிய குடும்பங்களில் தாக்கத்தை செலுத்துகின்றது. சமூக, கலாச்சார தொழில்நுட்ப மாற்றங்களை மிகவும் தாமதமாகவே குடும்பங்களில் ஏற்றுக்கொள்கின்றார்கள். இவற்றை பல பிரதேசங்களிலுள்ள முஸ்லீம் குடும்பங்களில் எப்படியான தாக்கங்களை ஏற்படுத்தியுள்ளது என்பதை கற்கப்போகிறோம்.

ஒரு அன்புக்குறிய குழந்தைக்கு அர்ப்பணிப்புள்ள செய்யும் பெற்றோரால் நல்ல எதிர்காலம் கிடைக்கும் எதிர்பாராத விதமாக சமுதாயத்தில் கவலைகளோடு வளரும் குழந்தைகள், திருமண தம்பதியினரின் சந்தோஷங்களும் பாரங்களும், வயதான பெற்றோரின் கவலைகள் போன்ற உலகளாவிய காரியங்களை அவதானித்து இந்த குடும்ப பிரச்சினைகளுக்காக ஜெபிக்கமுடியும்.

*சமூக, கலாச்சார தொழில்நுட்ப மாற்றங்களை மிகவும் தாமதமாகவே குடும்பங்களில் ஏற்றுக்கொள்கின்றார்கள்.*



# குடும்ப வாழ்க்கையை குறித்து இஸ்லாம் என்ன போதிக்கிறது?



"உங்களுக்குச் சிறந்தவன் அவன் குடும்பத்துக்கு சிறந்தவனே" என்று இஸ்லாம் போதிக்கின்றது. ஒருவன் தன் குடும்பத்தில் எப்படியிருக்க வேண்டும் என்பதை மார்க்கம் போதிக்கின்றது. பிள்ளைகளை கவனமாக வளர்க்கும் பொறுப்பு பெற்றோருக்குள்ள கணவன் மனைவி ஒருவருக்கொருவர் உண்மையாகவும் அன்பாக இருக்கவேண்டும். வயது வந்த பிள்ளைகள் தங்கள் வயது முதிர்ந்த பெற்றோரை கனம் பண்ணவும் கவனிக்கவும் வேண்டும். கலாச்சாரமும் விசுவாசமும் உலகமுழுவதிலும் தாக்கத்தை ஏற்படுத்தியுள்ளது. முஸ்லீம் குடும்பங்களில் விரும்பியோ விரும்பாமலோ பாரம்பரிய இஸ்லாமிய போதனைகளிலுள்ள குடும்ப சட்டதிட்டங்கள் பிரதிபலிக்கிறது.



ஆண்கள் சம்பாதிப்பவர்களாகவும் பெண்கள் வீட்டிலிருந்து குழந்தைகளை பார்த்துக்கொள்கிறவர்களாகவும் காணப்படுகிறது. சில பகுதிகளில் வித்தியாசமான இஸ்லாமிய பாரம்பரியங்களுடன் வாழ்கிறவர்களை நீங்கள் கண்டால் அவர்கள் நூறு வருடங்கள் பின்தங்கியிருக்கிறார்கள் என்று நீங்கள் உணர்வீர்கள். மற்ற பகுதிகளில் துரித மாற்றங்களை ஏற்றுக்கொண்ட முஸ்லீம் குடும்பங்களை காண்பீர்கள். குடும்பத்தை குறித்த எமது பார்வையை விசுவாசம் வடிவமைக்கின்றது. விசுவாசத்தை குறித்த எமது பார்வையை குடும்பம் வடிவமைக்கின்றது.

இந்த 30 நாட்கள் ஜெபத்தின் நோக்கமானது, உங்கள் ஜெபத்திற்கூடாக தேவ அன்பு முஸ்லீம் குடும்பங்களை கடந்துசெல்லவேண்டும் என்பதும் நீங்களும் உங்கள் குடும்பமும் தேவ அன்பை உங்களை சூழவுள்ள முஸ்லீம் குடும்பங்களுக்கு காட்டவேண்டும் என்பதுமாகும்.

நாள் 1 27 மே

சர்வதேச கரிசனை

# ஒரு குடும்ப உபவாசம்

நான் நோன்பு பிடித்த முதல் நாள் எனக்கு இன்னும் ஞாபகம் இருக்கிறது. அப்பொழுது எனக்கு ஏழுவயதுதான் ஆனால் பெரியவர்களைபோல் நானும் நடத்தப்பட்டேன். ரமளான் மாதம் பாடசாலையில் விடுமுறை கொடுக்கப்படும். அதனால் பகல் நேரத்தில் விரும்பினால் என்னால் தூங்கலாம். அதிகாலை 3 மணிக்கே என் தாய் என்னை எழுப்பிவிட்டாள் சஹர் செய்வதற்கு (சூரிய உதயத்திற்கு முன்பான அதிகாலை உணவு உண்பதற்கு). நாங்கள் சப்பாத்தியுடன் ஆம்லட்டும் தயிரும் சாப்பிட்டு தேனீர் அருந்தினோம். பிறகு நானும் எனது தாயும் வழமையான காலை தொழுகையை ஒன்றாக தொழுதோம். மற்றைய நாட்களைவிடவும் அந்த நாள் என் தாயாருடன் மிகவும் தொடர்ப்பை பேணிய ஒரு நாளாக இருந்தது. பிறகு நாங்கள் தூங்கச் சென்றோம். அந்த நாளின் முடிவில் நாங்கள் விளையாடினோம். என் தாயார் நோன்பு திறப்பதற்கு உணவு பதார்த்தங்களை செய்துகொண்டிருந்தாள். அதற்கும் நான் உதவினேன்.

இப்தார் (நோன்பு திறக்கும்) நேரத்தில் ஒரு விரிப்பில் நான் விரும்பிய அனைத்து உணவுகளும் காணக்கூடியதாக இருந்தது. எமது குடும்ப அங்கத்தவர் 10 பேரும் ஒன்றாக உணவருந்தும் ஒரே தருணம் இதுவே!. அது ஒரு பண்டிகை போன்று இருக்கும். இதுவே உண்மையான குடும்பம் என்பதை நான் உணர்ந்தேன். வெள்ளிக்கிழமை எனது தந்தை அவரது நண்பர்கள் சிலரை இப்தாருக்கு அழைத்திருந்தார். அன்று முதலாவது ஆண்கள் நோன்பு திறக்கும் வரையில் பெண்கள் காத்திருக்கவேண்டியிருந்தது. இந்த மாதம் முழுவதும் பகல் நேரத்தில் வீடு மிகவும் அமைதியாக இருக்கும். கழைப்படைந்துவிடுவோம் என்பதால் ஒருவருடன் ஒருவர் பெரிதாக பேசமாட்டோம். தொழுகையிலும் குர்ஆன் ஓதுவதிலும் தூங்குவதிலும் டீவி பார்ப்பதிலும் நேரத்தை செலவிடுவோம். இந்த நாட்களில் சற்று பதட்டமாகவே இருப்போம். அமைதியான முறையில் இறைவனுக்கு முன்பாக எது சரியானது என்பதை தேடுவோம். எங்கள் கடமைகளை செய்து ஏனைய மாதங்களைவிடவும் அதிகமாக இறை ஆசீர்வாதத்தைத் தேடுவோம்.

## நாம் எப்படி ஜெபம் செய்வது? நாம் எப்படி ஜெபம் செய்வது?

நோன்புக்கு உணவு தயார் செய்கிறவர்களுக்கு இயேசுதான் ஜீவ உணவு என்பது வெளிப்படும்படி ஜெபிப்போம்.

குடும்பமாக உணவு உட்கொள்ளும் போதும், தொழும் போதும் இயேசுவை சந்திக்கவேண்டும் என்று ஜெபிப்போம். அப்பொழுது அவரே ஜீவ தண்ணீர்! அதனை குடிடிக்கிறவர்கள் ஒருபோதும் தாகமடைய மாட்டார்கள்.

இறை ஆசீர்வாதத்தை எதிர்பாத்து காத்திருக்கும் குடும்ப சமாதானத்துக்காக மன்றாடுவோம்.



*மற்றைய நாட்களைவிடவும் அந்த நாள் என் தாயாருடன் மிகவும் தொடர்ப்பை பேணிய ஒரு நாளாக இருந்தது.*

நாள் 2 28 மே

வட ஆபிரிக்கா

# சகுவான் என்ற அன்டாலூய்ஸ், டுனீசியா

மலைநாட்டு நகரமான சகுவான் டுனீசியாவின் தலைநகரான டுனீசின் தெற்கில் 45 மைல் தொலைவில் அமைந்துள்ளது. இங்கு வாழும் 40,000 பேரில் பெரும்பான்மையானவர்கள் 17ம் நூற்றாண்டில் ஸ்பெயின் இஸ்லாமியர் வெளியேற்றப்பட்டபோது குடியேறியவர்களின் பரம்பரையினர் ஆவார்கள். 9ம் நூற்றாண்டில் இஸ்லாம் ஸ்பெயின் வரை பரவியதை மிகவும் பெருமையாக பேசுவார்கள். வண்டி ஓட்டுனர், தெருக்கடைகளில் பணிபுரிபவர்கள் மற்றும் தாய்மார்கள் தங்கள் குழந்தைகளுக்கு இந்த சரித்திரத்தை பெருமையாக சொல்லிக்கொடுத்து தாங்கள் எப்படி சகுவான் நகருக்கு வந்தோம் என்பதை போதிப்பார்கள். சகுவானில் ஆமனும் பண்ணீரும் கழந்து செய்த சிறிய உருண்டைவடிய பேஸ்டி மிகவும் பிரசித்தமானது.

அதனை காக் வர்கா என்று அழைப்பார்கள். சகுவான் சுற்றுலாவுக்கு பிரசித்திபெற்ற இடமாகும்.

ரோமானிய இடிபாடுகளும், பச்சைப்பசேல் என்ற அழகிய மலைப்பகுதிகளும், குளிர்காலத்தில் பனிபோர்த்திய மலைகளும் கண்கொள்ளாக்காட்சிகளாகும். 2015ம் ஆண்டு பயங்கரவாத தாக்குதலுக்கு முன்பு வரை வெளிநாட்டவர்களின் சுற்றுலாதளமாக இது விளங்கியது. தற்பொழுது சுற்றுலா பயணிகள் வருகைதராததினால் உள்நாட்டவர்கள் செய்வதறியாது அவதிப்படுகின்றனர். அநேக சுற்றுலா விடுதிகள் மூடப்பட்டுள்ளது. 2011ம் ஆண்டு மறுமலர்ச்சியின் பின்னர் அநேக டுனீசினீயர்கள் உலகில் தங்களின் புதிய இடத்தில் என்ன செய்வது என்று நிச்சயமற்ற நிலையில் உள்ளனர்.

புதிய அரசாங்கத்தின் மீது அவர்களுக்கு நம்பிக்கையில்லை. ரோமானிய பேரரசன் ஏட்ரியனின் ஆட்சிக்காலத்தில் சகுவானிலிருந்து 82 மைல் தூரத்துக்கு ஒரு கால்வாய் வெட்டி கர்த்தாஜ் நகருக்கு தண்ணீர் பாய்ச்சப்பட்டது. மலைப்பிரதேசங்களில் நீர் கோயில்கள் கம்பீரமாக இருந்தாலும் வசந்த காலத்திலும் நீரூற்றுக்கள் வறண்டே கிடக்கிறது.

ஒரு மாற்றம் - இந்த வறண்ட நிலத்துக்கு நீரைப்பாச்சுவது ஒரு ஆவிக்குறிய செயலை நினைவுபடுத்துகிறது. அன்மையில் ஒரு ஜெப குழு இந்த பகுதிக்குச் சென்று சகுவானின் வறண்ட வாழ்க்கைக்கு மீண்டும் நீருற்று உருவாக ஜெபித்தார்கள். அதாவது இந்த வறண்ட வாழ்க்கைக்கு நற்செய்தி கிடைக்கவேண்டும் என்று ஜெபித்தார்கள்.



*2011ம் ஆண்டு மறுமலர்ச்சியின் பின்னர் அநேக டுனீசினீயர்கள் உலகில் தங்களின் புதிய இடத்தில் என்ன செய்வது என்று நிச்சயமற்ற நிலையில் உள்ளனர்.*

## நாம் எப்படி ஜெபிப்பது?

- சுற்றுலா வீழ்ச்சியால் வாழ்வாதாரத்தை இழந்தவர்கள் தங்கள் குடும்பங்களை போஷிக்க சரியான ஒரு வழியை தேவன் திறக்கவேண்டும் என்று ஜெபிப்போம்.
- ஞானமான தலைமைத்துவத்துக்கூடாக ஸ்தீர தன்மையும் சமாதானமும் ஏற்பட மன்றாடுவோம்.
- யோவான் 4ம் அதிகாரத்தில் இயேசு கொடுப்பேன் என்று சொன்ன ஜீவ தண்ணீர் சகுவானை கடந்தோட வேண்டும் என்று ஜெபிப்போம்.

வட அமெரிகா

# பல்லின கலாச்சார வட அமெரிக்கா

“ஐ லவ் அமெரிக்கா” என்ற கோஷத்தோடு தனது குழந்தைகளை பாடசாலையில் விடுவதற்கு பாதையை கடந்தாள் பாத்திமா. அந்த பாடசாலையிலே 40 க்கும் மேற்பட்ட மொழிகளை பேசும் குழந்தைகள் கல்வி கற்கின்றனர். பாத்திமா சிக்காகோவில் அமைந்துள்ள ஓ ஹாரே சர்வதேச விமான நிலையத்தில் இரவு நேரத்தில் மழசலகூடங்களை துப்பரவு செய்யும் பணியில் ஈடுபடுகிறாள். அவள் கணவன் முஹம்மத் பகலில் ஒரு கோழி பண்ணையில் வேலை பார்க்கிறார். இவர்கள் ஒரு இருண்ட அடித்தள பிளாட்டில் வாழ்கிறார்கள். நான் பாதிமாவிடம் கேட்டேன் “இவ்வளவு கஷ்டத்துக்கு மத்தியில் வாழ்ந்துகொண்டு எப்படி ‘ஐ லவ் அமெரிக்கா’ என்று உங்களால் உரக்க கூற முடிகிறது?” அப்பொழுது அவள் தன் கதையை எனக்குச் சொல்ல ஆரம்பித்தாள். அவள் கண் முன்னாலேயே தனது தந்தையும் சகோதரனும் கொலை செய்யப்பட்டுள்ளனர். பிறகு சில காலம் குடும்பத்துடன் அகதி முகாமில் வாழ்ந்த அவளுக்கு அமெரிக்காவில் தஞ்சம் கிடைத்தது பரலோகத்தில் இருப்பது போல் தோன்றுகிறது. தனது குழந்தைகளுக்கு பாதுகாப்பான ஒரு சூழல் கிடைத்தது அவர்களுக்கு பெரும் மகிழ்ச்சியாக இருக்கிறது. பல இன மக்கள் தொடர்ந்தும் வட அமெரிக்காவுக்குள் தஞ்சம் புகுந்த வண்ணம் உள்ளனர். நிவ்யோக் நகரில் 5மில்லியனுக்கும் அதிகமான வெளிநாட்டவர்கள் வசிக்கின்றனர். டொரன்டோவின் அரைவாசிக்கும் அதிகமானவர்கள் கனடாவில் பிறந்தவர்கள் அல்ல. இந்த பெரிய நகரங்களில் மட்டுமல்ல. நடுத்தர நகரங்களிலும் குடியேற்றவாசிகளின் எண்ணிக்கை அதிகரித்துக் கொண்டேயிருக்கிறது.

2012ம் ஆண்டு அதிக குடியேற்றவாசிகள் குடியேறிய நகரமாகவும் குர்திஷ் இன மக்கள் பெரும்பான்மையாக வசிக்கும் நகரமாகவும் நாஷ்வெளி இடம்பிடித்தது.
பாத்திமா வசிக்கும் சிக்காகோவில் மத்திய ஆசியா, தெற்காசியா, அனேக ஆபிரிக்க நாடுகள், இந்துனேசியா, மலேசியா மற்றும் அனைத்து மத்திய கிழக்கு நாடுகளையும் சேர்ந்த முஸ்லீம்கள் வாழ்கின்றனர். அந்த பகுதியில் நீங்கள் நடைபயணம் செய்தால் கடை வீதிகளும் உணவகங்களும் கொல்கொத்தா, கராய்ச்சி வீதிகளில் நீங்கள் நடக்கும் உணர்வை கொடுக்கும். தொழுகை நேரங்களில் ஆண்கள் பள்ளிவாசல்களில் நிறம்பியிருப்பதை அவதானிக்கமுடியும். அநேக முஸ்லீம்கள் அமெரிக்கர்கள் அவர்களை வரவேற்றதைபோல் அவர்களும் விருந்தோம்பல் செய்வார்கள். அவர்களுக்குள் அர்த்தமுள்ள ஒரு நற்பு வளர்ந்துள்ளதை அவதானிக்க முடிகிறது.



## நாங்கள் எப்படி ஜெபிப்பது?

- பல்லின கலாச்சாரம் ஆசீர்வாதமானது அதேபோல் சவால்மிக்கது. வட அமெரிக்காவின் அநேக நகரங்களில் வாழும் இவர்கள் சமாதானமாக ஒன்றுகூடி வாழவேண்டும் என்று ஜெபிப்போம்.
- அமெரிக்க கிறிஸ்தவர்களும் சபைகளும் தங்கள் அயலார்களான இஸ்லாமியர்களுடன் கிறிஸ்துவின் அன்பை பகிர்ந்துகொள்ளவேண்டும் என்று ஜெபிப்போம்.
- ஏற்கனவே இந்த நகரங்களில் ஊழியம் செய்யும் சபைகளுக்கும் மிஷனரிமாருக்கும் இலாப நோக்கமற்ற நிறுவனங்களுக்கும் தேவையான பணமும் பலமும் கிடைக்கவேண்டும் என்று ஜெபிப்போம்.

*அநேக முஸ்லீம்கள், அமெரிக்கர்கள் அவர்களை வரவேற்றதைபோல் அவர்களும் விருந்தோம்பல் செய்வார்கள்.*

நாள் 4 30 மே

உலகளாவிய கரிசனை

# அவமானம் மற்றும் கௌரவ கலாச்சாரம்

அவமானம் மற்றும் கௌரவ கலாச்சாரத்தை கொண்ட இஸ்லாமிய சமுதாயத்தில் நானும் வழர்ந்தேன். என்னை யாரும் மற்ற பெண்களைபோன்று குறைசொல்லாதவாறு வாழ்வதற்கு சிறுவயதிலேயே கற்றுக்கொண்டேன். ஒருநாள் பெண்கள் ஒன்று சேர்ந்து கதைத்துக்கொண்டிருக்கும் ஒரு கிசுகிசுவை செவிமடுத்தேன். பல்கலைக்கழகம் சென்ற ஒரு பெண் தன் தலைமுடியையும் வெட்டிக்கொண்டு, தன்பெற்றோரின் விருப்பத்திற்கு புறம்மாக திருமணமும் செய்திருக்கிறாள். நான் நினைத்தேன் அந்த ஆண் ஒரு முஸ்லிம் அல்லாதவன் என்று. அவர்களின் கதையை கேட்கும்போது, அவன் சட்டம் பயின்ற ஒரு அரபு முஸ்லீம் என்பது தெளிவாகியது. அவர்களுடைய குடும்பங்களுக்கு அவமானத்தை கொண்டுவந்த இந்த கிசுகிசு எனக்கு குழப்பத்தை தந்தது. இஸ்ஸத் (கௌரவம்) ஷாம் (அவமானம்) ஆகிய இரண்டும் ஒரே கோட்பாட்டிலிந்தே வருகிறது. கலாச்சாரத்திலும் இவை பயிற்சிக்கப்படுவதில்லை. காரணம் மரியாதை சார்ந்த குற்றங்கள் பற்றிய செய்திகள் ஊடகங்களிலும் வருவதில்லை. கலாசாரங்களுக் குறுக்காக ஊழியம் செய்யும் மேற்கத்தையவர்கள் இந்த இரண்டு பதங்களையும் அறிந்திருந்தாலும் அதன் முழு அர்த்தத்தையும் அவர்களால் புரிந்துகொள்ளமுடிவதில்லை. முஸ்லீம் உலகின் அநேக சமுதாயங்களை அவமானம் கௌரவம் ஆகிய இவ்விரண்டும் சிறுவர்கள், பெரியவர்களின் நடத்தையை கட்டுப்படுத்துகிறது. அவமானம் அல்லது கௌரவம் என்பதை தீர்மானிப்பவர்கள் மத, கோத்திர தலைவர்களேயாவார்கள். இது முஸ்லீம்கள் அல்லாதவர்களின் கலாச்சாரங்களிலும் காணக்கூடியதாகவுள்ளது. மேற்கில் அவமானத்தை தீர்மானிப்பது சட்டமாகும். நாங்கள் எமது சமுதாயத்தை குறித்து எதிர்மறையான தாக்கங்கள் வரகூடாது என்பதற்காக இதனை பாவிக்கின்றோம். அவமானம் மற்றும் கௌரவ கலாச்சாரத்தில் வாழ்பவர்களுக்கு இயேசுவின் செய்தி என்னவென்றால் "ஆவியில் எளிமையுள்ளவர்கள் பாக்கியவான்கள் பரலோகராஜ்யம் அவர்களுடையது." (மத்தேயு 5:3)

*ஆவியில் எளிமையுள்ளவர்கள் பாக்கியவான்கள் பரலோகராஜ்யம் அவர்களுடையது.*

## நாம் எப்படி ஜெபிப்பது?

- 1சாமுவேல் 2:8 "அவர் சிறியவனைப் புழுதியிலிருந்து எடுத்து, எளியவனைக் குப்பையிலிருந்து உயர்த்துகிறார்; அவர்களைப் பிரபுக்களோடே உட்காரவும், மகிமையுள்ள சிங்காசனத்தைச் சுதந்தரிக்கவும் பண்ணுகிறார்;" ஆக கலாச்சாரத்தில் கட்டுண்டுகிடக்கிறவர்களுக்கு நற்செய்தி வெளிப்பட ஜெபிப்போம்.

இந்த அவமானம் மற்றும் கௌரவ கலாச்சாரத்தை புரிந்துகொள்ள தேவனிடம் வெளிப்பாடை கேட்டு ஜெபிப்போம். "இதோ, தெரிந்துகொள்ளப்பட்டதும் விலையேறப்பெற்றதுமாயிருக்கிற மூலைக்கல்லைச் சீயோனில் வைக்கிறேன்; அதின்மேல் விசுவாசமாயிருக்கிறவன் வெட்கப்படுவதில்லை" (1பேதுரு 2:6).

மரியாதை சார்ந்த குற்றங்களுக்காக தண்டனைபெற்றவர்கள் விடுவிக்கப்பட ஜெபிப்போம்.



நாள் 5 31 மே

தென் ஆபிரிக்கா

# கொமொரொஸ்: தாய்வழியில் கிடைத்த – ஆசீர்வாதம் அல்லது சாபம்?



ஆண்களுக்கு அவர்கள் பழைய பழக்கவழகங்கள் புதிய வீட்டில் கடைபிடிக்க இலகுவாக இருக்காது.

கோமொரொஸ் என்பது தென்கிழக்கு ஆபிரிக்காவின் மொஸாம்பிக் மடகஸ்காருக்கு மத்தியில் அமைந்துள்ள எரிமலை தீவுக்கூட்டமாகும். 640 சதுர மைல் பரப்பளவை கொண்ட இந்த தீவுகளில் சுமார் 800,000 மக்கள் தொகையினர் வாழ்கின்றனர். அவர்களில் 98 வீதமானவர்கள் முஸ்லீம்களாவர். அவர்களின் அனேகர் தாய்வழி மரபை பின்பற்றுகின்றனர். அதாவது குடும்ப சொத்துக்கள் தாய்க்குப்பின் மகளுக்கே உரித்தாகும். அந்த தீவுகளின் வீடுகள் பெண்களுக்கே சொந்தமாகும். திருமணத்தின்போது வீடு பெண்ணுக்கே சொந்தமாகும். அல்லது புதுவீடு கட்டிக்கொடுக்கப்படும். ஆண் மகன் தன் தாயின் வீட்டைவிட்டு மனைவியின் வீட்டில் குடி புகுவான். ஆண்களுக்கு அவர்கள் பழைய பழக்கவழக்கங்கள் புதிய வீட்டில் கடைபிடிக்க இலகுவாக இருக்காது. வேலையின்மை வீதம் அதிகரித்துக்கொண்டே செல்கிறது. அதனால் ஆண்கள் காட் விளையாடுவார்கள் அல்லது கூலிவேலைகள் செய்வார்கள். “நான் சிறுமியாக இருக்கும் பொழுது எனது தந்தை எங்களை விட்டு பிரிந்து சென்றுவிட்டார். இரண்டாவது முறையாக எனது தாயார் திருமணம் செய்துகொண்டாள். எனது வளர்ப்பு தந்தை வாரத்தில் இரண்டு அல்லது மூண்டு நாட்கள்தான் எங்கள் வீட்டுக்கு வருவார். மற்றைய நாட்களில் தனது சொந்த குடும்பத்துடன் அல்லது அவரது இரண்டாவது மனைவியின் வீட்டில் தங்குவார். எனது வளர்ப்புத் தந்தை என்னை என் தாயின் ஒன்றுவிட்ட சகோதரியாக பார்ப்பதை அதிஷ்டமாக கருதுகிறேன். அன்றாட செலவுகள், பண்பாட்டு பழக்கவழக்கங்கள், அசுத்த ஆவிகளிடமிருந்து என்னை எப்படி பாதுகாத்துக்கொள்வது போன்ற கடினமான காரியங்களை கற்றுள்ளேன். சாபங்கள் எங்கள் குடும்பத்துக்கு வரக்கூடாது என்று பயப்படுகிறேன். எனது ஒரே ஏக்கம் பொறுப்புள்ள கணவரும் என் குழந்தைகளுக்கு நல்லதொரு தகப்பனுமாகும். அதுவே இறைவனின் ஆசீர்வாதமும் பாதுகாப்புமாகும்.” இது ரஷ்மாவின் மட்டுமல்ல கொமொரொஸ் தீவுகளின் பொதுவான கதையுமாகும்.

## நாம் எப்படி ஜெபிப்பது?

- கோமொரொஸ் தீவுகள் அதிக இனப்பெருக்கமும் உலகில் மிகவும் வறிய நாடுகளில் ஒன்றுமாகும். அநேகர் தங்கள் பெரிய குடும்பத்தின் நாளாந்த உணவுக்கு மிகவும் சிரமப்படுகின்றனர். கல்வி, சுகாதாரம் குன்றியே காணப்படுகிறது. அறைவாசிக்கும் குறைந்த குழந்தைகளே பாடசாலைக்குச் செல்கின்றனர். மிகவும் சொற்ப வைத்தியர்களே உள்ளனர். இவர்களின் அடிப்படை தேவைகளுக்காக ஜெபிப்போம்.
- 2வீதத்திற்கும் குறைவான கிறிஸ்தவர்கள், அங்குள்ள தேவைகளை இனங்கண்டு கொமொரொஸ் தீவுக்கு வெளிச்சமாகவும் ஆசீவாதமாகவும் மாறவேண்டும் என்று ஜெபிப்போம்.

நாள் 6 1 ஜுன்

**மத்திய கிழக்கு**

# லெபனான்: சபையானது அகதிகளின் குடும்பம் போன்றது.

சிரியாவின் உள்நாட்டுப் போர் அலை அலையான அகதிகளை உருவாக்கிவிட்டது. சூழவுள்ள நாடுகளில் அவர்கள் தஞ்சம் புகுந்துள்ளனர். 2014 ஆண்டளவில் ஈராகிலிருந்தும் நூற்றுக்கணக்கான ஆயிரங்கணக்கான அகதிகள் வெளியேறிவிட்டனர். இவர்களில் அனேகர் லெபனானில் தஞ்சம் புகுந்துள்ளனர். அவர்களுக்கு லெபனானிய சபைகள் அர்ப்பணிப்புடன் பணிசெய்துகொண்டிருக்கின்றன. அண்மையில் 200 அங்கத்தவர்களை கொண்ட லெபனானிய சபையொன்றில் 300 சிரிய மற்றும் 300 ஈராக்கிய அகதிகள் தஞ்சம் அடைந்தனர். முழு குடும்பத்தையும் அல்லது குடும்பத்தில் சிலரை இழந்த அகதிகளுக்கு இந்த சபையே குடும்பமாக மாறிவிட்டது.
அவர்கள் வித்தியாசமான விதத்தில் உதவிகளை செய்துவருகிறார்கள். உணவுக் கூப்பன்கள், மருத்துவ வசதிகள், ஆலோசனைகள் போன்ற காரியங்களை இந்த சிறிய குழுவினர் செய்துகொண்டிருக்கின்றனர். சபை ஆராதனை மற்றும் ஆவிக்குறிய வளர்ச்சி திட்டங்களை ஏற்கனவே விசுவாசிப்பவர்களுக்கும் விசுவாசத்தை குறித்து சிந்தித்துக்கொண்டிருப்பவர்களுக்கும் வழங்குகின்றனர்.

கடந்த வருடம் இந்த சபை “குடும்பம்” என்ற தலைப்பில் காரியங்களை முன்னெடுத்தது. வீட்டை தொழிலை குடும்பத்தை இழந்து வேதனையில் இருக்கும் அனேக அகதிகளுக்கு இது மாற்றத்தை கொடுத்தது. திருமண கற்கைகளும் செயலமர்வுகளும் குடும்பத்தின் முக்கியத்துவத்தை அவர்கள் உணர்வதற்கு உதவியது. தனிப்பட்டவர்கள் சபை ஆராதனையிலும் சிறு குழுக்களிலும் கலந்துகொள்ள ஆர்வத்தை கொடுத்தது. ஆரோக்கியமான குடும்பங்களை கட்டியெழுப்புவதே அவர்களின் நோக்கமாக இருந்தது. அநேக அகதிகள் தங்களுக்கு ஆவிக்குறிய சகோதர சகோதரிகளை லெபனானிய சபைகளிலே கண்டுகொண்டார்கள். இந்த காரியங்கள் திருச்சபைகள் இவர்களை தத்தெடுத்து அவர்கள் புதிய வாழ்க்கையை ஆரம்பிக்க உட்சாகமூட்டக்கூடியதாகவுள்ளது.



## நாம் எப்படி ஜெபம் செய்வது?

- இன்னும் அனேக அகதிகள் எதிர்பார்ப்பற்ற சூழ்நிலையிலேயே வாழ்ந்துகொண்டிருக்கிறார்கள். அவர்களுக்கு ஆவிக்குரிய சரீர உணர்ச்சி ரீதியான உதவிகள் கிடைக்க ஜெபிப்போம்.

எதிர்காலத்தில் சபைகளும் மற்றவர்களும் அகதிகளை மேலும் ஆதரிக்கவேண்டும் என்று மன்றாடுவோம்.

லெபனானிலிருக்கும் அகதிகள் தங்களின் குடும்பத்தை கட்டியெழுப்ப நம்பிக்கையோடு நீண்ட போராட்டம் செய்கிறவர்குளக்காக ஜெபிப்போம்.

*வீட்டை தொழிலை குடும்பத்தை இழந்து வேதனையில் இருக்கும் அனேக அகதிகளுக்கு இது மாற்றத்தை கொடுத்தது.*

நாள் 1 2 ஜூன்

உலகளாவிய கரிசனை

# முஸ்லீம் பெற்றோரின் கரிசனை என்ன?



எனது நண்பி ராஸியா இங்கிலாந்தில் அமைந்துள்ள ஆசிய பெண்கள் நிலையத்தின் உதவி ஊழியர். அவளிடம் வரும் அனேக பெண்கள் அவளைப்போன்றே பாகிஸ்தானி முஸ்லீம் பின்னணியைக் கொண்டவர்கள். ராஸியா அப்பெண்கள்மீது ஆழ்ந்த கரிசனைக் காட்டுவாள். சமீபத்தில் அவளிடம் வரும் சில பெண்களின் கரிசனையைக் குறித்து என்னிடம் கூறினாள். அந்தப் பெண்களுக்கு கம்பியூட்டர் அறிவு கிடையாது. அதனால் தங்கள் குழந்தைகள் ஆன்லைனில் என்ன செய்கிறார்கள், என்ன பார்க்கிறார்கள், யார் யாரை சந்திக்கின்றார்கள் என்ற எந்த ஒரு தகவலும் அந்த தாய்மாரால் அறிய முடியாதுள்ளது.

நான் சில கிறிஸ்தவ பெற்றோரிடமிருந்தும் சில தகவல்களை பெற்றுள்ளேன். அவற்றுக்குள் சில ஒற்றுமைகள் இருப்பதை அவதானிக்க முடியுமாகவுள்ளது. ஆனால் தெளிவான வித்தியாசங்களையும் காணக்கூடியதாகவுள்ளது. முஸ்லீம்கள் சிறுபான்மையாக வாழும் நாடுகளில் முஸ்லீம் பெற்றோர் தங்கள் குழந்தைகளுக்கு எவ்வாறு இஸ்லாத்தை பற்றிய நேர்மறையான சிந்தனையை ஊட்டுவது என்றும், பயங்கரவாத செயல்களால் உருவாகும் வன்முறைகளிலிருந்து அவர்களை பாதுகாப்பதும் அவர்களின் பிரதான கரிசனையாகும். சிரியாவில் யுத்தம் ஆரம்பமானது முதல் 3,000 இற்கும் அதிகமான மேற்கு நாட்டவர்கள் சிரியா, ஈராக் நாடுகளுக்குப்போய் பல ஆயுத குழுக்களுடன் இணைந்து யுத்தம் செய்கின்றனர். அநேகர் தங்கள் பெற்றோருக்குத் தெரியாமல் இரகசியமாகவே போய் உள்ளனர். தங்கள் பிள்ளைகளின் செயல்களால் நண்பர்கள் அயலவர்களுக்கு முன்பாக குற்ற உணர்வில் உள்ளனர்.

தங்களை இந்த உலகுக்குக் கொண்டுவந்தவர்களைப்பற்றி சிந்திக்காமல் அவர்கள் செய்யும் காரியத்தினால் பெற்றோருக்கும் பிள்ளைகளுக்கும் ஏற்படும் அவமானங்களையும் பொருட்படுத்தாது இப்படி செய்கின்றனர். அநேக முஸ்லீம் பெற்றோர்களின் எதிர்பார்ப்பு தங்கள் பிள்ளைகள் நம்பிக்கையுள்ள முஸ்லீம்களாக வளர்ந்து, நல்ல முறையில் திருமணம் செய்து, நல்ல தொழில்வாய்ப்பைப் பெற்று, தன் குடும்பத்தை தாங்கவேண்டும் என்பதாகும். முஸ்லீம் தேசங்களுக்கு வெளியே வாழும் முஸ்லீம்களும் தங்கள் குழந்தைகள் முஸ்லிமாகவும் வெளியுலகோடும் ஒத்துப்போகின்ற சமநிலையான வாழ்கையை கற்றுக்கொள்ளவேண்டும் என்றே விரும்புகின்றனர். இந்த விடயம் கிறிஸ்தவர்களுடன் ஒப்பிடமுடியாததொன்றல்ல.

## நாம் எப்படி ஜெபிப்பது?

- நீங்கள் அறிந்த இஸலாமிய குடும்பங்களுடன் உறவை பலப்படுத்திக்கொள்வதற்காகவும் ஆசீர்வாதத்துக்காகவும் ஜெபியுங்கள்.
- தங்கள் பிள்ளைகளை தீவிரவாதத்திடம் இழந்துள்ள பெற்றோரின் நிம்மதிக்காகவும் சமாதானத்துக்காகவும் ஜெபிப்போம்
- பெற்றோருக்கும் குழந்தைகளுக்கும் இடையில் உள்ள கலாச்சார வித்தியாசத்தை புரிந்துகொண்டு சரியாக செயற்பட பெற்றோருக்கும், அவர்களுக்கு உதவுகிற சபை, சிறு குழுக்களுக்கும் இறைஞானம் கிடைக்க மன்றாடுவோம்.

தெற்காசியா

# முஸ்லீம்கள்: இந்தியாவில் சிறுபான்மை

ஷஹீல் தனக்கு மிகவும் பிடித்த வானொலி கூட்டுத்தாபனத்திடமிருந்து அன்பு என்று தலைப்பிட்ட ஒரு புத்தகத்தை பெற்றுக்கொண்டான். அதில் தேவ அன்பையும் மன்னிப்பையும் குறித்து தெளிவுபடுத்தப்பட்டிருந்தது. அதன் பிறகு சில நாட்களிலேயே ஈஸாவை பின்பற்றும் அப்துல் என்ற சகோதரை ஷஹீல் சந்தித்து, இந்த செய்தியை குறித்து முழுத்தெளிவையும் அவனிடமிருந்து பெற்றான். அது ஷஹீலின் வாழ்க்கையை முற்றிலும் மாற்றிவிட்டது. ஈஸாவை அறிக்கைசெய்து அவர் கொடுக்கும் இரட்சிப்பையும் பெற்றுக்கொண்டான். வீடு திரும்பிய ஷஹீல் தன் குடும்பத்தாருக்கு தன் வாழ்க்கையில் மாற்றத்தை ஏற்படுத்திய செய்தியை பகிர்ந்துகொண்டான். அடுத்த கனமே அவன் தகப்பன் "இது முஸ்லீம்களுக்குறியதல்ல" என்று உறுதியாகச் சொன்னார். அவரை எதிர்த்து வாதாடிய ஷஹீல் வீட்டைவிட்டு துரத்தப்பட்டான். சில காலம் அவன் தன் நண்பனுடன் தங்கி அனேக முஸ்லீம்களுக்கு தான் பெற்றுக்கொண்ட நற்செய்தியை பிரசங்கித்தான். 14 வருடங்களின் பின்னர் சில முஸ்லீம்கள் அவனின் போதனைக்கூடாக ஈஸாவை பின்பற்றத்தொடங்கினார்கள். அநேக இந்துக்களாலும் கிறிஸ்தவர்களாலும் ஏனைய மதத்தினராலும் இந்தியாவின் முஸ்லீம்கள் சந்தேக கண்கொண்டே பார்க்கப்படுகின்றனர். அவர்கள் இந்தியாவில் இரண்டாவது பெரும்பான்மையினராகவும்உலகில் மூன்றாவது முஸ்லீம் பெரும்பான்மையினராகவும் இருக்கின்றனர்!

அனேக கிறிஸ்தவர்கள் முஸ்லீம்களுக்கு மத்தியில் ஊழியம் செய்ய விரும்பாமையானது ஷஹீலுக்கு மிகவும் வேதனையை கொடுத்தது. "கிறிஸ்தவர்கள் முஸ்லீம்களை குறித்து புரிந்துகொள்ள நேரம் செலவிடவேண்டும். அவர்கள் சிறப்பாக உபசரிக்கவும் தெரிந்தவர்கள். சிலர் நினைக்கின்றனர் முஸ்லீம் ஆண்கள் ஒன்றுக்கு மேற்பட்ட மனைவியரை கொண்டுள்ளனர் என்று. அநேக முஸ்லீம் குடும்பங்களில் பலதாரமணத்தை ஆதரிப்பதில்லை. அவர்களும் ஏனைய இந்திய குடும்பங்கள் போன்றவர்களே. இனத்தாலும் மொழியாலும் வேறுபட்டாலும் அவர்களுடைய பிரச்சினைகளும் பொதுவானதே! அவர்கள் மதம் இஸ்லாமாயிருக்கிறது.



இந்திய முஸ்லீம்கள் தங்கள் அடையாளத்தை குறித்து மிகவும் பற்றுடையவர்கள். சமுதாயத்தில் 'முஸ்லிம்' என்பதே அவர்கள் அடையாளமாகும்" என்று தனது மனவேதனையை சொன்னான் ஷஹீல். இதுவே ஈஸாவை பின்பற்ற விரும்பும் முஸ்லீம்களுக்கு முன்புள்ள சவாலுமாகும். அப்படி ஈஸாவை பின்பற்றுகின்ற அநேகர் தொடர்ந்தும் முஸ்லீம் சமுதாயத்திலேயே இருக்க விரும்புகின்றனர்.

## நாம் எப்படி ஜெபிப்பது?

- இந்திய கிறிஸ்தவர்கள் முஸ்லீம்களை புரிந்துகொள்ளவேண்டும் என்று ஜெபிப்போம்.
- வித்தியாசமான நம்பக்கைகளுள்ள சமுதாயங்கள் வாழும் இந்தியாவில் சமாதானம் ஏற்பட ஜெபிப்போம்.
- இந்தியாவில் சிறுபான்மையான முஸ்லீம் சமுதாயம் முகம் கொடுக்கும் பிரச்சினைகளுக்கு எதிராகவும் கிறிஸ்தவர்கள் பயமின்றி கிறிஸ்துவின் அன்பை அவர்களுடன் பகிர்ந்துகொள்ளவேண்டும் என்றும் ஜெபிப்போம்.

*"இந்திய முஸ்லீம்களின் மதம் இஸ்லாம், ஆனால் சமுதாய அடையாளம் 'முஸ்லிம்' என்பதாகும்"*

வட அமெரிக்கா

# வட அமெரிக்காவின் ஆப்கானியர்கள்

1970களிலிருந்தே பாதுகாப்புக்காகவும் குடும்பத்தின் எதிர்காலத்திற்காகவும் ஆப்கானியர்கள் ஆப்கானிஸ்தானை விட்டு வெளியேறத் தொடங்கிவிட்டனர். வட அமெரிக்காவின் ஒரு மாநிலம் 60,000 இற்கும் அதிகமான ஆப்கானிய குடியேற்ற, அகதிகளின் வாழ்வு பூமியாக மாறியுள்ளது. வீட்டு வசதி, மொழி அறிவு, தொழில் திறன், சரீர சுகம், வீட்டு வன்முறைகளிலிருந்து பெண்களுக்கு பாதுகாப்பு, யுத்தத்தால் ஏற்பட்ட பேரதிர்ச்சியிலிருந்து சுகம் போன்றன இவர்களின் தேவையாகவுள்ளது.

1970 களின் கடைசி பகுதியில் ஆப்கான் ரஷ்யா யுத்தத்தின் காரணமாக முதல் முறையாக ஆப்கான் குடும்பங்கள் வட அமெரிக்காவுக்கு வந்தனர். அவர்கள் நன்கு கல்வி கற்ற, மதசார்பற்ற முஸ்லீம்கள்.

அவர்களின் குழந்தைகள் ஐக்கிய அமெரிக்காவில் வளர்ந்து பல்கலைக்கழகம் சென்று மேற்கத்தைய நாகரீகத்தில் வளர்ந்தவர்கள்.

செப்டம்பர் 11 தாக்குததின் பின்னர் அகதிகளாக வந்தவர்களின் அனேகர் விதவைகளும் குழந்தைகளுமாகும். அவர்கள் அநேக சவால்களுக்கு முகம் கொடுத்தார்கள். கல்வியறிவு குறைவான அவர்களுக்கு ஆங்கில அறிவும் குறைவாகவே இருந்தது. பொருளாதார பிரச்சினைகளுக்கும் முகம் கொடுத்தார்கள்.

மூன்றாவதாக அலையாக வந்தவர்கள் இன்றுவரை வந்துகொண்டுதான் இருக்கிறார்கள். அமெரிக்க அரசாங்கம் அவர்களுக்கு மொழிபெயர்ப்பாளர்களையும் நியமித்துவருகிறது. அவர்களுக்கு தொழில் பயிற்சியும் அவசியமாக இருக்கிறது. சிலருக்கு மனஅழுத்தத்துக்கான சிகிச்சையும் தேவைப்படுகிறது.

குடும்பமாகவும் சமுதாயமாகவும் இவர்களுக்கு பொதுவான தேவையாக பள்ளிவாசல் அல்லது ஆப்கானிய மார்கெட் உள்ளது. பல சகாப்தமாக நிலவும் யுத்தம், கோத்திரமுறைமை காரணமாக ஆப்கானியர்களுக்குள் நம்பிக்கையை காண்பது மிகவும் அரிதாகவே இருக்கிறது. எதிர்பாராப சில ஆப்கானியர்கள் தங்கள் மேற்கத்தைய அயலவர்களுடன் ஐக்கியம் கொள்கின்றனர். இதற்கூடாக உள்நாட்டு சபை ஆப்கானியர்களின் தேவைகளை சந்திக்கக்கூடியதாகவுள்ளது.

மீரியம் இப்படியான ஒரு முகவராக பணி செய்கிறாள். தனது மக்களை மிகவும் கரிசனையோடு கவனித்துவருகிறாள். அவளுடைய தரிசனத்தோடு இணைகிறவர்களுக்காக இடைவிடாது முயற்சித்துக்கொண்டிருக்கிறாள். தொழில் பயிற்சிகள் கொடுப்பதும் வீட்டு வன்முறைகளுக்குற்படுகிறவர்களுக்கு உதவுவதுமே பிரதான தேவையாகவுள்ளது.

அண்மையில் ஒரு கிறிஸ்தவருடன்கூட இணைந்து துஷ்பிரயோகத்தினாலும் மனஅழுத்தத்தினாலும் பாதிக்கப்பட்ட பெண்களுக்கு உதவினாள். அவர்கள் இருவரும் இணைந்து அந்த பெண்கள் வாழ்க்கையில் தெய்வீக சுகத்தை பெற்றுக்கொடுக்க வகை தேடினார்கள். பல காலமாக நிகழும் வன்முறைகள் மாறி, ஆப்கான் குடும்பங்களில் சமாதானமும் சுகமும் ஏற்படவேண்டும் என்பதே அவர்களின் எதிர்பார்ப்பாகும்.

மேலதிக தகவல்களுக்கு:
northamericanafghans@gmail.com



## நாம் எப்படி ஜெபிப்பது?

யுத்தத்தால் பாதிக்கப்பட்ட ஆப்கானியர்கள் மனஅழுத்தத்திலிருந்து விடுபட ஜெபிப்போம்.

உள்நாட்டுச் சபைகள் ஆப்கானியர்களுக்கு உதவி ஒத்தாசைகள் செய்யவேண்டும் என்று ஜெபிப்போம்.

திருமண வாழ்க்கைகளில் மாற்றங்களும் வன்முறைகளிலிருந்து விடுபட விரும்புகிறவர்களுக்கு உதவியும் கிடைக்கவேண்டும் என்று ஜெபிப்போம்.

மத்திய கிழக்கு

# எமனில் குடும்பம்: எங்கே பாரம்பரியம் மேலோங்கும்

உலகில் ஒருசில நாடுகளில் மட்டுமே இன்னும் பாரம்பரிய குடும்ப முறை திகழுகிறது. அதில் ஒரு நாடுதான் எமன். மிகவும் வறிய அரபு தேசமும் தனித்துவமான கோத்திர கலாச்சாரமும் நீண்ட இஸ்லாமிய சரித்திரமும் குடும்ப கலாச்சாரமும் கொண்ட எமன் மிகவும் பழமைவாத நாடாகும். திருமணங்களிலேயே இது தெளிவாக வெளிப்படுகிறது. அநேகமான திருமணங்கள் நிச்சயிக்கப்பட்டவையாகும். மணமகனும் மணமகளும் திருமணத்துக்கு முன் ஒருவரையொருவர் மிகவும் குறைவாகவே அறிந்துள்ளனர். கிராமப்புறங்களில் பெண்கள் மிகவும் இளவயதிலும் ஆண்கள் நான்கு திருமணங்களையும் செய்கின்றனர். குடும்பத்திலும் சமுதாயத்திலும் ஆணுக்கும் பெண்ணுக்கும் பல அழுத்தமான சட்டங்கள் உள்ளன. அவர்கள் திருமணங்களும் ஆணுக்கொன்றும் பெண்ணுக்கொன்றுமாக இரண்டு பகுதிகளில் நடைபெறுகிறது. அழுத்தங்களும் பொறுப்புக்களும் ஆண்களைவிடவும் பெண்களுக்கு குறைவாக இருந்தாலும் வாழ்க்கை மிகவும் கடினமாகவே உள்ளது. மிகவும் குறைந்த பெண்களே வெளியறங்கில் தங்கள் முகத்தை காட்டுகின்றனர். அநேகமான பெண்கள் அபாயா அணிகின்றனர். அநேக பெண் பிள்ளைகளை பாடசாலைக்கு அனுப்புவதும் இல்லை. அதனால் படிக்கவோ எழுதவோ தெரியாது. திருமணம் செய்து பிள்ளை பெத்து, வீட்டை கவனிப்பதே அவர்கள் உலகமாக இருக்கின்றது.

*அழுத்தங்களும் பொறுப்புக்களும் ஆண்களைவிடவும் பெண்களுக்கு குறைவாக இருந்தாலும் வாழ்க்கை மிகவும் கடினமாகவே உள்ளது.*

எமனின் வரண்ட கிராமங்கள் என்பதன் அர்த்தம் அங்கே அநேக வேலைகள் உண்டு என்பதாகும். ஒரு நாளைக்கு பலமுறை கீழேயிருந்து மலையுச்சிக்கு தண்ணீர் சுமந்துசெல்லவேண்டும். யெமன் முழுவதுமாக சுவிசேஷத்தால் ஆதாயப்படுத்தப்படாத ஒரு நாடாகும். ஒரு சில மறைமுக சபைகள் இயங்குகிறது. உள்நாட்டு விசுவாசிகள் பழைமைவாத இஸ்லாத்துக்கு முன்னால் சாட்சி பகர்வதும் கிறிஸ்துவின் ஒளியை இருளில் பிரகாசிக்கச் செய்வதும் சவால்மிக்கதாகும்.

## நாம் எப்படி ஜெபிப்பது?

- யெமன் தேசம் முகம் கொடுக்கின்ற அரசியல் நெருக்கடிக்காகவும் அதனால் ஏற்பட்ட யுத்தம், பயங்கரவாதம், வறுமைக்காகவும் ஜெபிப்போம். அவர்களுடைய கலாச்சாரத்தைவிடவும் பெண்களின் பெறுமதியை புரிந்துகொண்டு, அவர்களை பாதுகாத்து, வாழ்க்கையை அனுபவிக்க சந்தர்ப்பத்தை கொடுக்கவேண்டும் என்று ஜெபிப்போம்.
- அங்கு இருக்கின்ற சொற்ப கிறிஸ்தவர்கள் விசுவாசத்தில் உட்சாகமடைந்து, சமுதாயத்துக்கு சாட்சியாகவும் முன்னுதாரணமாகவும் வாழவேண்டும் என்று ஜெபிப்போம்.



நாள் 11 6 ஜுன்

உலகளாவிய கரிசனை

# பயங்கரவாதம் எப்படிப்பட்டது?

**“தேவன் நமக்குப் பயமுள்ள ஆவியைக் கொடாமல், பலமும் அன்பும் தெளிந்த புத்தியுமுள்ள ஆவியையே கொடுத்திருக்கிறார்.” (2தீமோ. 1:7)**

இன்று பயங்கரவாதத்தை குறித்து பயம்! முஸ்லிம்களை குறித்து பயம்! எதிர்காலத்தை குறித்து பயம்! என்று பயத்தின் ஆவி ஆக்கிரமித்துள்ளது. இஸ்லாத்தை அல்லது இஸ்லாமிய ஆட்சியை விமர்சிக்கின்றவர்கள் மீது இஸ்லாமிய எதிரிகள் என்ற குற்றச்சாட்டு முன்வைக்கப்படுகிறது. சிலர் இந்த இஸ்லாமிய எதிர்ப்பு என்பது தேவையற்றது என்று நினைக்கின்றனர்.



மறுபக்கத்தில் முஸ்லீம்கள், இஸ்லாம் என்பது சமாதானத்தின் மார்க்கம்! பயங்கரவாதிகள் இஸ்லாத்தின் பெயரை பயன்படுத்தி அதனை நாசமாக்கிக்கொண்டிருக்கின்றனர் என்று நினைக்கின்றனர். அமைதி மார்க்கம் இஸ்லாம் என்பது தீவிரவாதிகளின் செயல்களினால் யாதார்த்தத்தில் தகர்ந்து போயுள்ளது.

பயங்கரவாத தாக்குதல்களின் செய்திகளை கேள்விப்படும்போது அவை பிசாசின் செயல்கள் என்பதை அறிகிறோம். பயங்கரவாதம், கொலை, அநீதியான செயல்கள் மற்றும் அப்பாவிகள் பாதிக்கப்படும்போது எமக்கு கோபம் வருகிறது. இயேசு கூறினார் “கோபம் கொண்டாலும் பாவம் செய்யாதிருப்பாயாக” அதன் அர்த்தம் என் கோபம் ஒரு செயலுக்கு என்னை இட்டுச்செல்லுமா? எனது கடமை வாழ்க்கை மாற்றத்திற்காக சுவிசேஷம் அறிவிப்பதா?

2001 செப்டம்பர் 11 பயங்கரவாத தாக்குதலுக்குப் பின்னர், ஒரு அமெரிக்க கிறிஸ்தவ வாலிபன் அவனுக்குள் பயமும் கோபமும் இருந்தபோதிலும் ஒரு செயலை செய்ய முற்பட்டான். முஸ்லீம் வாலிபர்களுடன் நற்புகொண்டு அதற்கூடாக கிறிஸ்துவின் சுவிசேஷத்தின் செய்தியை அவர்களுடன் பகிர்ந்துகொண்டான். இப்படியானச் செயல்களையே இயேசு அவரை பின்பற்றுகிறவர்களிடம் எதிர்பார்க்கிறார். தேவன் எமக்கு பயமுள்ள ஆவியைக் கொடாமல் அன்பும் பெலமும் தெளிந்த புத்தியுமுள்ள ஆவியைக் கொடுத்திருக்கிறார் என்று வேதம் சொல்கிறது. ஆகவே எமது முஸ்லீம் அயலவர்களுக்கு இரக்கம் செய்வோம். இன்றைய உலகிலும் இயேசுவே எங்கள் எதிர்பார்ப்பு என்று நாங்கள் நம்பினால், பயங்கரவாதிகளின் உள்ளங்களையும் நம்மால் மாற்றமுடியும். சமாதானத்தை உருவாக்கும் புதிய சித்தாந்தம் சுவிசேஷமேயாகும்.

## நாம் எப்படி ஜெபிப்பது?

- முஸ்லீம்களை குறித்துள்ள பயத்தின் ஆவிக்குப் பதிலாக அன்பின் ஆவியை ஊற்றுமாறு பரிசுத்த ஆவியானவரை வேண்டுவோம்.
- தேவ ஆவியானவர் நமக்குள் இருக்கிற பயத்தை மேற்கொண்டு எம்மை சூழ உள்ள முஸ்லீம்களை நேசிக்க உதவவேண்டும் என்று மன்றாடுவோம்.
- பயங்கரவாத செயல்களில் ஈடுபட்டுக்கொண்டிருக்கிறவர்களுக்கு இயேசு தன்னை வெளிப்படுத்தி, அவர்கள் வாழ்க்கை மாற்றமடைய வேண்டும் என்று ஜெபிப்போம்.

*இன்றைய உலகிலும் இயேசுவே எங்கள் எதிர்பார்ப்பு என்று நாங்கள் நம்பினால், பயங்கரவாதிகளின் உள்ளங்களையும் நம்மால் மாற்றமுடியும்.*

கிழக்காசியா

# நான் திருமணம் செய்யவேண்டும்!

எக்ஸியோமா வட சீனாவில் வாழும் 19 வயது ஹுய் இன முஸ்லிம். அனேகமான ஹுய் இன முஸ்லீம் வாலிபர்கள் இந்த வயதில் திருமணம் செய்துவிடுவார்கள். ஆனால் எக்ஸியோமாவுக்கு திருமனம் செய்ய ஒரு தடையிருந்தது. சீதன பணத்தை எப்படி செலுத்துவது என்பதே அந்த பிரச்சினை. அவன் குடும்பத்திற்குச் சொந்தமான ஒரு சிறு உணவு விற்பனை கடையிருந்தது. அங்கு ஒரு அப்பம் (வெள்ளை கேக்) 0.80 யானுக்கு விற்கப்பட்டது. எக்ஸியோமாவுடைய தந்தை அவனுக்கு ஒரு பெண்ணை பார்த்து முடிவுசெய்தார். பெண் வீட்டார் 50,000 யான் சீதனமாக கேட்டார்கள். அதற்காக 62,500 அப்பம் விற்கவேண்டும்! அதற்கு மேலதிகமாக 3 தங்க நகைகளும் ஒரு காரும் கொடுக்கவேண்டும். பல வருடங்களுக்கு முன்பு மோட்டார் சைக்கிளாக இருந்தது இப்பொழுது மோட்டார் காராக மாறிவிட்டது. காதணி, நெக்லஸ், கைவலயல் ஆகிய மூன்றும் அந்த நகைகளாகும். சீன முஸ்லீம் சம்பிரதாய திருமன விழா 3 நாட்களாக தொடர்ந்து உணவும் பாணங்களும் வழங்கப்படும். தனக்கு திருமணம் நடக்காது என்று நினைத்துக்கொண்டிருந்த எக்ஸியோமாவின் திருமண நாளும் அறிவிக்கப்பட்டது. குடும்பத்தாரும் நண்பர்களும் அவனை வாழ்த்துவதற்காக வந்துகொண்டிருந்தார்கள். நானும் அவனை சந்திக்கச் சென்றேன்.

“இந்த சந்தோஷமான முடிவை எப்படி எடுக்க முடிந்தது” என்று அவனிடம் கேட்டேன். அவனுடைய தந்தை நண்பர்களிடமும் உறவினர்களிடமும் கடனாக கொஞ்சம் பணத்தை பெற்றதாகவும், மீதி பணத்துக்காக அவருடைய அப்பக் கடையை விற்றுவிட்டதாகவும் சொன்னான். மேலும் சீதனத்துக்கு அவசியமான காரை தான் தவணை முறை கடனில் வாங்கியதாகவும், திருமணம் முடிந்தவுடன் தென் சீனாவுக்குப்போய் அங்கு புதிய வியாபாரத்தை ஆரம்பித்து கடன்களை செலுத்தப்போவதாகவும் சொன்னான்.

அவனுடைய கனவு ‘தான் பணத்தை சேர்த்து தனது மனைவிக்கும் பிள்ளைகளுக்கும் ஒரு வீடு வாங்கவேண்டும். ஆதில் தனது வயோதிப பெற்றோரையும் வைத்துக்கொள்ளவேண்டும்’ என்பதாகும். திருமனம் முடிந்து சில நாட்களிலேயே தென் சீனாவில் குடியேறவேண்டியுள்ளது. அப்படியானால் அந்த புதிய ஸ்போட் காருக்கு என்ன நடக்கும்? அது விற்கப்பட்டுவிடும்.



## எப்படி ஜெபம் செய்வது?

- வட சீனாவில் வறுமையில் வாழ்கிறவர்களுக்காகவும் திருமணத்துக்காக கடன்பட்டுள்ள குடும்பங்களுக்காகவும் ஜெபிப்போம்.
- அனேகமான சீன முஸ்லீம்கள், ஆண்கள் 19 வயதிலும் பெண்கள் 16 வயதிலும் திருமணம் செய்யவில்லையென்றால் அதனை இழிவாகவே பார்க்கின்றனர். இந்த இளவயதினர் தேவனுடைய கண்களில் இவர்களின் பெருமதியை புரிந்துகொள்ளவேண்டும் என்று ஜெபிப்போம்.

*சீன முஸ்லீம் சம்பிரதாய திருமன விழா 3 நாட்களாக தொடர்ந்து உணவும் பாணங்களும் வழங்கப்படும்.*

# நாள் 13 8 ஜுன்

மத்திய ஆசியா

# கிரிகிஸ்தான் குடும்பங்கள்

கிரிகிஸ்தான் சோவியட் யூனியனிலிருந்து 1991 ம் ஆண்டு சுதந்திரம் பெற்று குடியரசானது. அந்த பிராந்தியத்தில் ஜனநாயக பாராளுமன்றமுள்ள ஒரே நாடு கிரிகிஸ்தான்தான். இது ஒரு மலைநாடாகும் (24,406 அடி உயரம்) சுமார் 6 மில்லியன் மக்கள் வாழ்கிறாகள். அதில் 75 வீதமானவர்கள் சுன்னி முஸ்லீம்கள். இஸ்லாமிய மதச்சடங்குகள் சோவியட் யூனியனுக்குள் இருக்கும் போது அவ்வளவாக இல்லை. கடந்த 25 வருடங்களாக மிகவும் கடுமையாகிவிட்டது. நாட்டின் பொருளாதார நிலைமை காரணமாக அநேகர் வெளிநாட்டு வேலைவாய்ப்புகளைத் தேடிச் செல்ல நிர்பந்திக்கப்படுகின்றனர். 2016 ஆகஸ்டில், 16 வயது கிரிகிஸ் பெண் மாஸ்கோ களஞ்சிய தீயில் மடிந்தது இதற்கு சிறந்த ஆதாரம். பெற்றோர் குழந்தைகளை தாத்தா, பாட்டியிடம் அல்லது உறவினர்களிடம் விட்டுச்செல்கின்றனர். சிலர் அனாதை நிலையங்களில் விட்டுச் செல்கின்றனர். அநேகமான குழந்தைகள் பெற்றோரின் பராமரிப்பின்றியே வளர்கின்றனர். கணவனின் தாய் முழு குடும்பத்தையும் கட்டுப்படுத்துகின்றாள். மருமகள் அடிமையாகவே நடத்தப்படுகின்றாள். திருமணமான இரண்டு வருடங்களுக்குள் கருத்தரிக்காவிட்டால் அவளை விலக்கிவிட்டு வேறு ஒரு பெண்ணை திருமணம் செய்ய கணவன் தன் தாயால் நிர்ப்பந்திக்கப்படுகிறான்.

சில பின்தங்கிய பகுதிகளில் பெண்கள் கடத்தப்பட்டு பலவந்த திருமணங்கள் செய்துவைப்பதும் வழமையில் உள்ளது. அனேக கிரிகிஸ்தான் மனைவியர்கள் தங்களுக்கு உள்ள ஒரே வழி தற்கொலைதான் என்று நினைக்கின்றனர்.
1990ம் ஆண்டு முதன் முறையாக வீட்டு குழு சபை ஒன்று ஸ்தாபிக்கப்பட்டது. கிறிஸ்தவ விழுமியங்களையும் குடும்ப வாழ்க்கை பற்றியும் ஒருவரை ஒருவர் நேசித்து ஒருவருக்கு ஒருவர் ஊழியம் செய்வது பற்றியும் கற்றுக்கொடுக்கப்பட்டது. மிகவும் கட்டுக்கோபான பாரம்பரிய குடும்ப அமைப்பிலிருந்து வெளியே வந்து கிறிஸ்துவை விசுவாசிப்பது இன்னும் கடினமான காரியமாகவே உள்ளது.

## நாம் எப்படி ஜெபிப்பது?

- நாட்டின் பொருளாதார நிலைமை சீறாக அமைந்து, பெற்றோர் வேலைதேடி வெளிநாட்டுக்குச் செல்லாமல் குடும்பம் ஒன்றாக இருக்க ஜெபிப்போம்.
- தாய்மார் தங்கள் ஆண் மகன்களின் திருமண வாழ்வில் குறிக்கிட்டு மருமகள்களை துன்புறுத்தாமல் இருக்கவேண்டும் என்று ஜெபிப்போம்.
- கிறிஸ்தவ குடும்பங்கள் கலாச்சார சவால்களுக்கு முகம்கொடுத்து அன்பில் ஒருவருக்கு ஒருவர் ஊழியம் செய்யவேண்டும் என்று ஜெபிப்போம்.



*அநேகமான குழந்தைகள் பெற்றோரின் பராமறிப்பின்றியே வளர்கின்றனர்.*

நாள் 14 9 ஜுன்

ஐரோப்பா

# ஒரு சிரிய அகதி குடும்பம் காத்திருக்கிறார்கள்.

கிரீசில் ஒரு இராணுவம் நடத்தும் முகாமில் குர்திஷ் குடும்பம் ஒன்றை சந்தித்தோம். தந்தை அஸா வண்டி ஓட்டுனராக பணிபுரிந்துள்ளார். தாய் கியா 12 வயது முஹம்மதையும் 8 வயது ஹதீஜாவையும் 3 வயது இப்ராஹிமையும் கவனித்துக்கொள்வதுமாக அவர்கள் குடும்ப வாழ்க்கை ஓடியுள்ளது. அவர்களின் வீடு இருந்த சிரியாவின் அலேப்போ நகரம் குண்டுதாக்குதலினால் முற்றாக நிர்மூலமாகிவிட்டது.

அவர்கள் தாங்கள் பாதுகாப்புக்காக ஜேர்மனியை நோக்கி பயணிக்க தீர்மானித்தனர். துர்கியின் எல்லைக்குச் சென்று, மத்திய தரைக்கடலுக்கூடாக கடந்ததுச் செல்ல ஒருவழியை கண்டுபிடித்தனர். அந்த பயணத்துக்காக கடத்தல்காரர்களுக்கு 5,000 யூரோக்களை அஸா செலுத்தினார். அவர்கள் பாதுகாப்பாக கிரீஸின் இடோமெனி கிராமத்தை சென்றடைந்தனர். அங்கு தங்கிய சிலநாட்களில் ஐரோப்பாவுக்கான எல்லை முடப்பட்டது. மூன்று மாதங்களாக அங்கு தரித்திருந்த அவர்களை இராணுவத்தினர் இந்த இராணுவ முகாமுக்கு கொண்டுவந்துவிட்டனர். பதிவு செய்யப்பட்டு அகதி அந்தஸ்து கிடைத்து இந்த முகாமிலிருந்து வெளியேறிவிடலாம் என்ற எதிர்பார்ப்போடு காத்திருக்கின்றனர். அவர்களுக்கு குறைந்த உணவுகளே கிடைக்கின்றது. அரசசார்பற்ற நிறுவனத்தினால் ஆரம்பித்த பாடசாலையில் குழந்தைகள் கல்வி கற்கின்றனர். சிரியாவில் இருக்கும் போது முஹம்மது மட்டும் 2 வருடங்கள் பாடசாலை போயிருந்தான். அயலவர்களுடன் ஆங்கிலம் கதைத்து பழகிய முஹம்மது தன் குடும்பத்தின் மொழிபெயர்ப்பாளனாக மாறியிருந்தான். அந்த குடும்பம் தங்கள் சேமிப்புகளையெல்லாம் சிரியாவிலிருந்து தப்பிவருவதற்கு செலவிட்டிருந்தனர். தன் குடும்பத்தை கவனிக்கமுடியாது மிகவும் வேதனையில் உள்ளார் அஸா. கயா எப்படியாவது குடும்பத்தை ஓட்டுவதற்கு முயற்சித்துக்கொண்டிருக்கிறாள். சிலவேளைகளில் சமையல் பாத்திரங்களை இரவல் வாங்கி சமைத்து கூடாரத்துக்குள் வைத்துக்கொள்வாள். பிள்ளைகளையும் துணிகளையும் சுத்தம் செய்துகொள்வாள். தங்களை பார்க்க வருகின்றவர்களுக்கு ஒரு கப் தேனீர் கொடுக்கும் காலம் மீண்டும் வரும்வரையில் காத்திருக்கின்றனர்.

## நாம் எப்படி ஜெபிப்பது?

- இவர்களை போன்று அகதி அந்தஸ்துக்காக காத்திருக்கின்ற குடும்பங்களின் தேவைகளை கிறிஸ்தவர்கள் தொடர்ந்தும் சந்திக்கவேண்டும் என்று ஜெபிப்போம். அவர்கள் மொழிபேசும் உதவியாளர்களுக்காக ஜெபிப்போம். அது ஆழமான உறவுகளை கட்டியெழுப்ப உதவும்.

அகதி சிறுவர்கள் அவர்களின் சிறுபிராயத்தில் கிடைக்க வேண்டிய கல்வியுரிமையை பெற்றுக்கொள்ள ஜெபிப்போம



நாள் 15 10 ஜுன்

## மத்திய கிழக்கு

# மத்திய கிழக்கின் மழங்குடி குடும்பங்களில் உள்ள ஊனமுற்றோர்

அராபிய தீபகற்பத்தின் பாரம்பரிய குடும்ப முறை கோத்திரங்களை சூழவே அமைந்துள்ளது. இது இன்றும் வேதாகமக் காலத்தை பிரதிபலிக்கின்றது. ஒவ்வொரு கோத்திரத்தாருக்கும் அவர்கள் அடையாளமும் இனப்பெருக்கமும் பொருளாதாரமும் பெரிதான கௌரவமாக கருதப்படுகின்றது. இது பல தலைமுறைகளாக 50 ஆண்டுகளுக்கு முன்பு எண்ணை கண்டுபிடிக்கும் வரை இம்முறைமை மாறாமல் இருந்தது.
பொருளாதாரம் எல்லாவற்றையும் துரிதமாக மாற்றிவிட்டது. வளைக்குடா நாடுகள் உலகின் செல்வந்த நாடுகளாக மாறிவிட்டன. கல்வி மருத்துவம் போன்றவற்றில் பாரிய மாற்றங்கள் ஏற்பட்டிருப்பினும், குடும்ப கட்டமைப்பில் மனநிலை மிகவும் சிறிதளவே மாறியுள்ளது. அதாவது கோத்திர குடும்பங்களின் தூய்மையை இன்னும் பாதுகாக்கிறார்கள். பாரம்பரிய திருமணங்கள் நெறுங்கிய இரத்த உறவினர்களுக்கிடையிலேயே நடைப்பெறுகிறது.

பல தலைமுறைகளாக இறந்து பிறக்கும் குழந்தைகள், குறைபாடுகளுள்ள குழந்தைகள், பரபணு கோளாறுள்ள குழந்தைகள் பிறக்கின்றன.

சம்பிரதாயமாக இப்படியான குறைபாடுகள் உள்ள குழந்தைகளை வீடுகளில் ஒளித்துவைக்கிறார்கள். வீட்டிலுள்ள எனைய அங்கத்தவர்களிடமிருந்து இவர்களை ஒதுக்கிவைக்கிறார்கள். இது கடவுளின் நியாயத்தீர்ப்பு என்று கருதுகிறார்கள். இந்த பிராந்தியத்தில் உடல் குறைப்பாடுள்ளவர்களின் எண்ணிக்கை மிகவும் அதிகமாகவுள்ளது. துரதிஷ்டவசமாக சரியான தகவல்கள் எதுவும் இல்லை. அதற்குக் காரணம் அவர்களுடைய அவமான கலாச்சாரமாகும்.

எங்கும் உடல் ஊனமுற்றவர்கள் இருந்தாலும் வெளியறங்கில் காண்பது மிகவும் அரிதாகும். ஒவ்வொரு குடும்பத்திலும் ஒருவராவது பிறவிக்குறைப்பாடுள்ளவர் இருக்கிறார். அநேக குடும்பங்கள் யாரிடமும் உதவி கேட்பதற்கு தயங்குகிறார்கள். காரணம் அவர்களுடைய அவமான கலாச்சாரம். குடும்பங்களிலுள்ள இந்த பிரச்சனையை எதிர்கொள்ள அவர்களுக்கு உதவ, சில வளைக்குடா நாடுகள் நன்கு பயிற்றுவிக்கப்பட்ட ஒரு உள்நாட்டு பெண்கள் குழுவை அரசு நியமித்து, 3 முதல் 18 வயது வரை உள்ள ஊனமுற்ற பிள்ளைகளுக்கு கல்வியும் சந்தோஷமான அர்த்தமுள்ள வாழ்க்கை வாழ பயிற்சியும் வழங்கப்படுகின்றது.

## நாம் எப்படி ஜெபிப்பது?

- புதிய தலைமுறையின் இளம் குடும்பங்கள் அவர்களுடைய பழைய சமூக முறையை மாற்றி, பிறப்பு ஊனத்தை குறைக்க வழிமுறைகளை கையாளவேண்டும் என்று ஜெபிப்போம். ஊனமுற்ற குழந்தைகள் உள்ள குடும்பங்களுக்கு உதவிகளை பெறும் வழிகள் பெருகவேண்டும் என்று ஜெபிப்போம். இந்த விலைமதிக்க முடியாத குழந்தைகளுக்கும் அவர்கள் பெற்றோருக்கும் அளவில்லாத இயேசுவின் அன்பு கிடைக்கவேண்டும் என்று ஜெபிப்போம்.



நாள் 16 11 ஜூன்

தென் கிழக்காசியா

# பக்கரின் கதை

பக்கருக்கு மலேசியாவிலே தனது வீட்டில் எல்லா வசதிகளும் அன்பான குடும்பமும் இருந்தது. பணத்திற்கு எந்த ஒரு குறைவும் இருக்கவில்லை. குடும்பத்தில் ஒரே ஆண் மகன் என்றதால் அனைவருடைய கவனமும் அவன் மீதே இருந்தது. குடும்பத்தின் கௌரவத்தை உயர்த்தும் சுமை அவன் தலையில் விழுந்தது. பக்கர் போதை வஸ்துக்கு அடிமையானான். கடைசியில் வீதிக்கு வந்து, குப்பைக் கூடங்களிலுள்ளவைகளை சாப்பிடும் நிலைமைக்கு வந்துவிட்டான்.

அந்த நேரத்தில் அவன் குடும்பம் அவனை நினைத்துக்கூடப் பார்க்கவில்லை. சமுதாயமும் அவன்மீது இரக்கம் காட்டவில்லை. நம்பிக்கையின்மையும் தனிமையுமே அவனுடைய நண்பர்களாக இருந்தனர். ஒருநாள் பாதிக்கப்பட்ட அவனுடைய கால்களுடன் நடக்கமுடியாமல் குப்பைத் தொட்டியருகே விழுந்துகிடந்தான். ஒரு கிறிஸ்தவ வாலிப குழுவினர் அவனைக் கண்டு, அவனை வைத்தியசாலையில் சேர்த்துவிட்டார்கள். வைத்தியர் தாதியை பார்த்து "இந்த குப்பைத் துண்டை அகற்று" என்று சொல்லும் வரையில் ஒரு நாள் முழுவதும் வைத்தியசாலையில் இருந்தான். அவனுடைய புதிய நண்பன் அவனை தன் வீட்டுக்கு அழைத்துச் சென்று கரிசனையோடு பார்த்துக்கொண்டான். அவர்கள் சுவிசேஷத்தின் படி வாழ்வதும் அவனிடம் ஒன்றும் எதிர்பார்க்காமல் அவனுக்காக ஜெபிப்பதும் பாக்கரின் உள்ளத்தைத் தொட்டது.

அவர்கள் காண்பிக்கும் அன்பை தாங்கிக்கொள்ள முடியாமல் அவர்களிடமே கேட்டுவிட்டான் "நீங்கள் ஏன் என்மீது இப்படி அன்பு செய்கிறீர்கள்? இந்த அன்பு எனக்குத் தேவை…" என்ற வார்த்தைகள் அவன் உள்ளத்தின் ஆழத்திலிருந்து வந்தது. பாக்கர் ஈஸா அல் மஸீஹ்வை பின்பற்ற தீர்மானித்ததினால் பரலோகத்தில் சந்தோஷம் உண்டாயிற்று.

இன்று அவன் திருமணமாகி சந்தோஷமான ஒரு குடும்பத்தில் தாத்தாவாகிவிட்டான். அவனுடைய தந்தையின் குடும்பத்துடனும் ஒப்புரவாகிவிட்டான். குறிப்பாக அவனுடைய தந்தை இப்பொழுது அவனுடைய நெருங்கிய நண்பன்.

## நாம் எப்படி ஜெபிப்பது?

- மலேசியா உத்தியோகப்பூர்வமான ஒரு இஸ்லாமிய நாடு. ஆனால் மதச் சுதந்திரம் உள்ளது. சனத்தொகையில் 60 வீதமானவர்கள் இஸ்லாத்தையும் மற்றவர்கள் ஏனைய மதங்களையும் பின்பற்றுகின்றனர். 9 வீதமானவர்கள் கிறிஸ்தவர்கள். பல்வேறு இனங்களுக்கு மத்தியில் நிழவும் சமாதானம் தொடரவேண்டும் என்று ஜெபிப்போம்.
- மலேசியாவில் கடுமையான சட்டங்கள் இருப்பினும் போதைவஸ்து பிரச்சினை அதிகரித்துக்கொண்டேச் செல்கிறது. புனர்வாழ்வளிக்க மேற்கொள்ளும் புதிய முயற்சிகளுக்காக ஜெபிப்போம்.
- இந்த கதையில்போன்று கிறிஸ்தவர்கள், வாழும் சுவிசேஷமாக தொடர்ந்தும் வாழ வேண்டும் என்று ஜெபிப்போம்.

இந்த என்பு எனக்குத் தேவை...



நாள் 11 12 ஜூன்

வட ஆபிரிக்கா

# இஷேல்ஹாயின் பெபர்கள்

தென் மொரோக்கோவில் 4.5 மில்லியன் இஷேல்ஹாயின் பேபர்கள் வாழ்கின்றனர். வடக்கிலும் கிழக்கிலுமுள்ள உயர்ந்த அட்லஸ் மலைத்தொடர்களே அவர்களின் ஸ்தீர வதிவிடம். அநேகர் அந்த பகுதியிலிருந்து நகர்புறங்களுக்கு குடிபெயர்ந்துள்ளனர். 8 ம் நூற்றாண்டில் இஸ்லாமமயமாக்களுக்கு முன்பு அநேகர் மொரோக்கோவின் சமவெளிகளில் வாழ்ந்துவந்தனர். இஸ்லாத்தை தழுவியதன் பிற்பாடு அவர்கள் மலை பிரதேசங்களுக்குச் சென்றனர். ஆனாலும் அவர்களின் சம்பிரதாய பழக்கவழகங்களை கைவிடவில்லை.

இஷேல்ஹாயின் பாரம்பரிய வீடுகள் கட்களிலும் பூமியிலும் சுற்றிவர அறைகள் கொண்ட விருந்தினரை உபசரிக்க விசேட ஒரு பகுதியுமாக கட்டப்பட்டிருக்கும். அனேகமாக ஹனட்ஸ் என்று அழைக்கப்படும் சிறிய கடைகளில் வேலை செய்கிறார்கள். முழு நாளும் திறந்திருக்கும் அந்த கடைகளில் பலவிதமான பொருட்கள் விற்பனை செய்யப்படுகிறது. இவர்கள் மத்தியில் பொருளாதார பாதுகாப்பு மிக முக்கியமானது. தனது குடும்பத்துக்காகவும் சமுதாயத்தில் மதிக்கப்படும் நபராக வாழ்வதற்கும் கடினமாக உழைத்து பணம் சேர்க்கிறார்கள். அதாவது திருமணம் செய்து குழந்தைகள் பெற்று நல்ல குடும்பஸ்தனாக வாழவேண்டும் என்பதே இவர்களின் ஆசையாகும். மாறிவரும் உலகிலும் தனது பிள்ளைகள் தங்களை கனம் பண்ணவேண்டும் என்றும் பாரம்பரியங்களை பின்பற்றவேண்டும் என்றும் கண்டிப்பாக இருக்கிறார்கள். அனேக வாலிபர்கள் தொழில்வாய்ப்புகளுக்காக வெளியூர்களுக்குச் செல்கிறார்கள். அக்பர் இஷெல்ஹாயை சேர்ந்த ஒரு வாலிபன். வேலைவாய்ப்புக்காக ரபாத் நகரத்துக்குச் சென்றான். நல்லதொரு தொழிலில் சேர்ந்து பணம் சம்பாதித்து ஒரு வீடு வாங்குவதே அவன் இலட்சியம். அவன் அண்மையில் செட்லைட் தொலைக்காட்சியில் கிறிஸ்தவ கலந்துரையாடல் ஒன்றை பார்த்தான்.

அதனால் பல கேள்விகள் அவனுக்குள் தோன்றியது. தனது குடும்பத்தார் முஸ்லீம். ஆனாலும் மார்க்கத்தைவிடவும் வியாபாரத்துக்கே முக்கியத்துவம் கொடுக்கின்றனர். ரமளான் மாதத்தில் மட்டும்தான் வணக்க வழிபாடுகளில் ஈடுபடுவார்கள். அக்பர் தேவனைக்குறித்து சிந்திக்கத் தொடங்கினான். அவரைப்பற்றி அறிந்துகொள்ள ஆவல்கொண்டான். தான் இஸ்லாத்துக்கு மாற்றமான விசுவாசத்தை பின்பற்றுவது அவன் குடும்பத்துக்கு ஏற்படுத்தும் இழுக்கு என்பதையும் அவன் அறிந்திருந்தான்.

## நாம் எப்படி ஜெபிப்பது?

- குடும்ப கௌரவத்துக்காகவும் பொருளாதார பாதுகாப்புக்காகவும் சர்வதேக கரிசனைக்காகவும் வேதனைப்படும் இஷேல்ஹாயின் குடும்பங்களுக்காக ஜெபிப்போம்.

இவர்கள் வித்தியாசமான வழிகளில் கற்றுக்கொள்ள ஆர்வமுள்ளவர்கள். செட்லைட் டீவி நிகழ்ச்சிகளுக்கூடாகவும் கிறிஸ்தவர்களை சந்திப்பதற்கூடாகவும் இயேசுவை அறிந்துகொள்ளவேண்டும் என்று ஜெபிப்போம். அங்கு வாழும் சொற்ப கிறிஸ்தவர்கள் கிறிஸ்துவின் அன்பைக் காண்பிக்கும் சாட்சிகளாக மாறவேண்டும் என்று ஜெபிப்போம்.



நாள் 18 13 ஜுன்

தென் கிழக்காசியா

# மேற்கு சுமத்ராவின் மினன்கபாஉ மக்கள்

“யா அல்லாஹ் பெறப்போகும் குழந்தை பெண் குழந்தையாக தருவாயாக” என்று தொடர்ந்து 4 ஆண் குழந்தைகளின் பெற்றோரான டாடியும் புத்ராவும் துஆச் செய்துகொண்டிருந்தனர். வேறு எந்த இஸ்லாமிய கலாச்சாரம் கொண்ட மக்கள் குழுக்களிடமும் இல்லாத ஆண் பிள்ளைகளைவிடவும் பெண் பிள்ளைகளுக்கு முக்கியத்துவம் கொடுக்கும் வழக்கம் இந்தோனேஷியாவின் மேற்கு சுமத்ராவின் மனிக்கபாஉ மக்கள் மத்தியில் உள்ளது. மேற்கு சுமத்ராவின் இஸ்லாம் தாய்வழி மரபில் வந்த சுதந்திரம் மூத்த மகளுக்கு செல்லும் சம்பிரதாயத்தை அப்படியே உள்வாங்கிவிட்டது. ஆண் மகன் வளர்ந்தவுடன் அவனின் எதிர்காலத்திற்குத் தேவையானதை அவன் தேடிக்கொள்ளவேண்டும். பெண் தன் பெற்றோருடனேயே இருந்து சொத்துக்களை அனுபவிப்பாள். ஆண் திருமணமானவுடன் பெற்றோரை விட்டு பிரிந்த மனைவியின் வீட்டுக்குச் சென்றுவிடுவான்.



கணவனைவிடவும் தன் இரத்த சொந்தங்களுக்கே முக்கியத்துவம் கொடுப்பாள். கணவன் விருந்தாளி போன்றே நடத்தப்படுவான்.முக்கிய நகரங்களில் குடும்பங்கள் பலவீனமடையும்போது சொத்துக்களை விற்பனை செய்வதற்கு அனைத்து அங்கத்தினரும் சம்மதம் தெரிவிக்கவேண்டும். இந்த குடும்ப முறைமை சுவிசேஷத்துக்கு தடையில்லாமல் இருந்தாலும் முஸ்லீம்கள் விசுவாசத்துக்குள் வருவதற்கு ஒரு பெரும் தடையுள்ளது. இந்த மக்களில் ஒருவர் இயேசுவை சொந்த இரட்சகராக ஏற்றுக்கொண்டால் உடனேயே அவரை குடும்பத்தை விட்டும் சமுதாயத்தை விட்டும் ஒதுக்கிவிடுவார்கள். கணவர் கிறிஸ்துவுக்குள் வந்தால் மனைவி விவாகரத்துக்கொடுத்துவிடுவாள். திருமணமாகாத பெண் விசுவாசத்துக்குள் வந்தால் அவளுடைய வாரிசு சொத்துக்களை இழந்துவிடுவாள். 8 மில்லியன் மினன்கபாஉ மக்களில் வெறும் ஆயிரம் பேர்தான் விசுவாசிகள் இருக்கின்றனர். அவர்களிலும் அனேகர் கிறிஸ்தவ ஆண்களை திருமணம் செய்ததால் கிறிஸ்தவரானவர்கள்.

## நாம் எப்படி ஜெபிப்பது?

- மினன்கபாஉ சமுதாயத்தில் பெண்களுக்கு நல்ல செல்வாக்குள்ளது. அவர்கள் முன்மாதிரியாக வாழவேண்டும் என்று ஜெபிப்போம். மினன்கபாஉ கலாச்சாரத்தின் மையத்துக்காக ஜெபிப்போம். பாரம்பரியத்திலிருந்து பழமைவாத அரபு கலாச்சாரத்துக்கு மாறியது. அதிலிருந்து உலகமயமாக்களுக்கும் மேற்கத்திய கலாச்சாரத்துக்கும் மாறியுள்ளது. முழு குடும்பமுமாக கிறிஸ்துவுக்குள்ளான புதிய வாழ்வை அனுபவிக்கவேண்டும் என்று ஜெபிப்போம்.

*ஒருவர் இயேசுவை சொந்த இரட்சகராக ஏற்றுக்கொண்டால் உடனேயே அவரை குடும்பத்தை விட்டும் சமுதாயத்தை விட்டும் ஒதுக்கிவிடுவார்கள்.*

நாள் 19 14 ஜுன்

ஐரோப்பா

# சுவீடனிலுள்ள முஸ்லீம் அகதிகள்

2015 ம் ஆண்டில் 161,000 தஞ்சம் தேடுவோர் எல்லையை கடந்து சுவீடனுக்குள் வந்தனர். அது வாரத்துக்கு 10,000 பேர் அளவில் அதிகரித்தது. சுவீடனின் மக்கள் தொகை வெறும் 9.5 மில்லியனாகும். சனத்தொகையை பார்க்கும்போது வளர்ச்சியடைந்த ஏனைய எந்த நாட்டையும் விட அதிகமான அகதிகளை ஏற்றுக்கொண்ட நாடு சுவீடனாகும். இது சுவீடனின் இயலுமையை மீறிவிட்டது. வருட இறுதியில் புதியவர்களின் வருகையை நிறுத்துவதற்கு நாடு முடிவு செய்தது.

அனேக சபைகளும் ஊழியர்களும் இந்த இடைவெளியை நிறப்ப உதவினார்கள். பாலாங்கேயில் தன்னார்வ தொண்டர்கள் உணவுகளையும் 50 பேர் அளவில் தங்கக்கூடியவாறு தற்காலிக கூடாரங்களையும் மலசலகூடங்களையும் தயார் செய்து கொடுத்தனர். தற்காலிக வீடுகளுக்கு செல்லும் வரை சில குடும்பங்கள் 3 வாரங்கள் அந்த இடத்தில் தங்கினார்கள். பல குடும்பங்கள் 6 முதல் 8 வாரங்களாக அவர்கள் அகதிகள் என்று பதிவு செய்யப்பட்டு சுவிடனுக்குள் செல்லும் வரை அங்கேயே தங்கினார்கள். இந்த நாட்களில் அந்த அகதிகள் வேலையொன்றும் இல்லாமல் வெட்டியாக இருந்தனர். இந்த சந்தர்ப்பத்தில் தன்னார்வ தொண்டர்கள் ஒரு சர்வதேச விடுதியை ஆரம்பித்தனர். இதற்கூடாக அநேக அகதிகள் கிறிஸ்தவ விசுவாசத்தை கேட்கக்கூடியதாக இருந்தது. சுவீடன் விசுவாசிகள் காட்டிய அன்புக்கு பிரதியுத்தரம் கொடுக்க அவர்களால் முடியுமாக இருந்தது. ஐரோப்பா முழுவதையும் அவதானிக்கும் பொழுது கடந்த ஆண்டுகளில் சுவீடன் சபைகள் வியத்தக அளவு உறுப்பினர் வீழ்ச்சியை கண்டுவந்தது.



தற்பொழுது அரபு அகதிகளிலிருந்து புதிய விசுவாசிகளால் சபை உறுப்பினர் எண்ணிக்கை அதிகரித்துள்ளது. ஒரு சிறிய நகரில் சிரியா மற்றும் ஆப்கானிஸ்தானை சேர்ந்த 5,000 அகதிகளில் 1,000 பேர் அளவில் சபைகளுக்குச் செல்ல ஆரம்பித்துள்ளனர். அண்மையில் சிரியாவைச் சேர்ந்த முழு குடும்பமுமம் ஞானஸ்நானம் எடுத்தனர். இதனை கண்ட ஒரு மூதாட்டி "என் வாழ்நாளில் முழு குடும்பமும் ஞானஸ்நானம் எடுத்ததை இதுதான் முதல்முறையாக பார்க்கிறேன்" என்றாள். அவள் சிறுமியாக இருக்கும் பொழுதுதான் சுவீடன் எழுப்புதல் ஏற்பட்டது என்பது குறிப்பிடத்தக்கது.

## நாம் எப்படி ஜெபிப்பது?

- சுவீடனுக்கு உதவுவதற்கு ஆசை இருந்தாலும் இருக்கும் வளங்களை சமனாக பயன்படுத்துவதில் சிக்கல் ஏற்பட்ட வேளையில் திருச்சபை குடியேற்றவாசிகளுக்கு உதவ முன்வந்தமைக்காக ஜெபிப்போம்.

அனேக குடும்பங்கள் பல மாதங்களாக புதிய வாழ்க்கையை ஆரம்பிப்பதற்காக வீசா கிடைக்கும் வரையில் காத்துக்கிடக்கின்றனர். சபையார் அவர்களை உட்சாகமூட்டவும் சினேகிக்கவும் வேண்டும் என்று ஜெபிப்போம்.

சுவிடனுக்கு தனித்துவமான ஒரு கலாச்சாரம் உண்டு. வித்தியாசமான பின்னணியிலிருந்து வருகிற அகதிகளுடன் ஒத்துபோகவேண்டும் என்று ஜெபிப்போம்.

நாள் 20 15 ஜூன்

தெற்காசியா

# பெண்பிள்ளைகளுக்கும் கல்வி

நாம் ஒரு கொண்டாட்டத்திற்காக உலகின் கூரை எனப்படும் உலகின் உயரமான இடத்தில் அமைந்துள்ள ஒரு பின்தங்கிய கிராமத்துக்குச் சென்றோம். இந்தியா, பாகிஸ்தானை சேர்ந்த ஒரு பெரிதான மக்கள் தொகையினர்கள் அங்கு வசிக்கின்றனர். இந்த பழமைவாத சுன்னி குழுவினர் படிப்பறிவில்லாதவர்களாகவும் வறுமையின் பிடியில் இருந்தாலும் தங்கள் பிள்ளைகள் முன்னேறவேண்டும் என்று விருப்பங்கொண்டவர்கள்.

பல வருடங்களுக்கு முன்பு எமது குழுவினர் இந்த கிராமத்திலுள்ள மதத் தலைவர்களை சந்தித்தார்கள். அவர்களுடன் இணைந்து ஆண் பிள்ளைகளுக்கு பாடத்திட்டம், சீருடை, தலபாடங்கள், ஆசிரியர்களுக்கான சம்பளம், கோடைக்காலத்தில் வகுப்பறை நடத்துவதற்கான கூடாரங்கள் என்பன வழங்கினோம். பிறகு அந்த கிராமத்து தலைவர்கள் தங்கள் பெண் பிள்ளைகளுக்கும் கல்வி அறிவு தேவை என்று எம்மிடம் உதவி கேட்டதையிட்டு நாங்கள் மிகவும் மகிழ்ச்சியடைந்தோம். இது தேவன் எங்கள் உள்ளத்தில் கொடுத்த வாஞ்சையாகும்.

நாங்கள் எங்கள் பயணத்தில் முதலாவது பெண்கள் பாடசாலையை ஆரம்பிக்கவே வந்திருக்கிறோம். 15 பெண் பிள்ளைகளுக்கு தேவையான சீருடை, புத்தகங்களை கொண்டுவந்திருந்தோம். 70 பெண் பிள்ளைகள் பாடசாலை செல்ல ஆயத்தமாக இருந்தது எங்களை மிகவும் ஆச்சரியப்படுத்திவிட்டது. அநேகமாக குடும்பங்கள் தங்கள் பெண் குழந்தைகளும் கல்வி கற்க வேண்டும் என்று விரும்பினார்கள். இது இதற்கு முன்பு ஒருபோதும் இந்த கிராமத்தில் நடக்காத ஒரு சம்பவம். உண்மையிலேயே இது ஒரு கொண்டாட்டமாகும்.

"எனது குழந்தைகளுக்கு உதவ முடியவில்லையே என்று மிகவும் மனவேதனையில் இருந்தேன். ஆனால் இப்பொழுது அவர்கள் கைகளில் பென்சில்களையும் புத்தகங்களையும் காணும்பொழுது மிகவும் மகிழ்ச்சியாக இருக்கிறது. எனக்கு ஆறு பெண் பிள்ளைகளும் மூன்று ஆண் பிள்ளைகளும் இருக்கிறாகள். இன்று அவர்கள் அனைவரும் பாடசாலை செல்கின்றார்கள்" என்று ஆனந்தக் கண்ணீருடன் ஒரு தந்தை சாட்சி சொன்னார். கர்த்தர் இந்த குடும்பங்களில் செய்த கிரியைகளை கற்பனை செய்து பாருங்கள்!

## நாம் எப்படி ஜெபிப்பது?

- கிராமத்தின் தலைவர்களுக்கும் தெற்காசியாவில் குடும்பங்களுக்கு உதவிகள் வழங்கும் நிறுவனங்களுக்கும் இடையில் நல்ல உறவு திகழவேண்டும் என்று ஜெபிப்போம்.

அந்த பிராந்தியத்தில் தொடர்ந்தும் பெண்கள் பாடசாலைகள் தாக்குதல்களுக்கு முகம் கொடுக்கின்றது. பெண் பிள்ளைகளின் பாதுகாப்புக்காகவும் நல்ல எதிர்காலத்துக்காகவும் ஜெபிப்போம்.

தேவ வார்த்தையில் தாகமுள்ளவர்களுக்காக முதல்முறையாக அவர்கள் சொந்த மொழியில் மொழியாக்கம் செய்யப்படும் பொழிபெயர்ப்பு வேலைகளுக்காக ஜெபிப்போம்.



நாள் 21 16 ஜூன்

மத்திய கிழக்கு

# மத்திய கிழக்கின் டொமாரி நாடோடிகள்

டொமாரி நாடோகள் மத்திய கிழக்கின் லெபனானடொமாரி நாடோகள் மத்திய கிழக்கின் லெபனானசிரியா பாலஸ்தீன் நாடுகளில் வாழ்கின்றனர். அந்த பகுதியில் இவர்கள் "நவார்" என்ற பெயரில் அழைக்கப்படுகின்றனர். இவர்கள் 700, 1000 வருடங்களுக்கு முன்பு வட இந்தியாவிலிருந்து மத்திய கிழக்குக்கு குடிபெயந்தவர்கள்.



அவர்களுடை இசை நடன மோகத்தால் இவர்கள் நாடோடி மக்கள் என்பதை அறிய முடிகிறது. ஆனாலும் இன்று அநேகமானவர்கள் பல பிரதேசங்களில் நிரந்தரமாக வசிக்கின்றனர். அனேகர் இன்றும் பலகையினாலும் பழைய பொருட்களாளும் செய்யப்பட்ட கூடாரங்களில் வாழ்கின்றனர்.

டொமாரி நாடோடிகள் சமுதாயத்தில் தாழ்ந்தவர்களாகவே பார்க்கப்படுகின்றனர். ஆகவே தங்கள் நாடோடி அடையாளத்தை அவர்கள் மறைத்துக் கொண்டு வாழ முற்படுகின்றனர். பெரிய சமுதாயத்தின் பாரபட்சத்தையும் துஷ்பிரயோகத்தையும் எதிர்கொள்கின்றனர். அநேகரிடம் உத்தியோகப்பூர்வ ஆவணங்கள் இல்லை. அதனால் குழந்தைகளுக்கு பாடசாலைகளோ மருத்துவ வசதிகளோ கிடைப்பதில்லை. குடும்பங்கள் பெரியதாகவும் பெண்களுக்கு சிறுவயதில் திருமணங்களும் நடக்கின்றது. பெண்கள் பணம் தேடுவதற்கு நிர்ப்பந்திக்கப்படுகிறார்கள். சிலவேளைகளில் பெண் குழந்தைகள் தங்கள் தகப்பன்மாருடன் நடனமாடுவதற்கு அல்லது விபச்சாரம் செய்வதற்கு அனுப்பப்படுகின்றனர். ஆண்கள் காப்பி அருந்திக்கொண்டு கூட்டமாக சம்பாசித்துக்கொண்டிருக்கும் இடங்களுக்கு இவர்கள் பிள்ளைகள் பிச்சையெடுக்க அனுப்பப்படுகின்றனர்.

*தங்கள் நாடோடி அடையாளத்தை அவர்கள் மறைத்துக் கொண்டு வாழ முற்படுகின்றனர்*

மத்திய கிழக்கின் நாடோடிகள் இஸ்லாமிய விசுவாசத்திற்கு தத்தெடுக்கப்பட்டுள்ளனர். மூடநம்பிக்கைகளும் பழமைவாத இஸ்லாத்தையுமே பின்பற்றுகின்றனர். உலக ஆவிகளை கட்டுப்படுத்த மந்திரங்கள் செய்கின்றனர். இவர்கள் கிறிஸ்தவர்களாக மாறும்போது, இசையுடன் தேவனை ஆராதிக்க அனாதியான ஆர்வம் காட்டுகின்றனர். தைரியமான மிகவும் தாகமுள்ள விசுவாசத்தில் உறுதியானவர்களாகவும் காணப்படுகின்றார்கள்.

## நாம் எப்படி ஜெபிப்பது?

- டோமாரி நாடோடிகளின் பொருளாதார நிலைமை சீரடைந்து, குழந்தைகளுக்கு கல்வி கிடைக்கவும் சுரண்டல்கள் இன்றி வேலை வாய்ப்புகள் கிடைத்து, தங்கள் குடும்பத்தின் தேவைகளை பூர்த்தி செய்யவும் வேண்டும் என்று ஜெபிப்போம்.
- அசுத்த ஆவிகள் மேலுள்ள பயம் நீங்கி, தேவ ஒளியையும் அன்பையும் புரிந்துகொள்ளவேண்டும் என்று ஜெபிப்போம்.
- டொமாரி விசுவாசிகள் அவர்கள் கலாச்சாரத்தை சரியான முறையில் பலப்படுத்தி அவர்கள் சமுதாயத்தை சீரான வழியில் நடத்தவேண்டும் என்று ஜெபிப்போம்.

நாள் 27 17 ஜூன்

உலகளாவிய கரிசனைகள்

# விசுவாசம் ஒரு குடும்பத்தை மாற்றும் போது..



உனக்கு நான் யார் என்பதை அறியவேண்டுமானால் நாங்கள் யார் என்று கேள்!

முஸ்லீம் என்ற அடையாளம் மேலோங்கியிருக்கும் கலாச்சாரத்தையுடைய ஒரு குடும்பத்தில் ஒருவர் கிறிஸ்துவை பின்பற்றும் போது எப்படியான தாக்கங்கள் ஏற்படும்? எனது ஒரு நண்பி அவளையும் அவளுடன் உள்ள இஸ்லாமிய பின்னணி விசுவாசியான சகோதரி ஒருவரையும் வந்து சந்திக்குமாறு கேட்டுக்கொண்டாள். அநேக புதிய இஸ்லாமிய பின்னணி விசுவாசிகளைப்போன்று சொராயா என்ற அந்த சகோதரியும், தன் குடும்பத்தாரிடம் தனது புதிய விசுவாசத்தைப் பற்றி சொல்வதற்குப் பயந்துகொண்டிருந்தாள். தேவனுடைய ஆச்சரியமான செயல்களைக் கண்டு உட்சாகத்திலுள்ள அவளுக்கு அந்த காரியங்களை தன் குடும்பத்தாரிடம் சொல்வதற்குத் தடையாக, பயம் இருந்தது. அவளுடைய இந்த பயத்துக்குக் காரணம் தன் குடும்பத்தாருடன் உறவு முறிந்துவிடும் என்பதற்காக அல்ல. ஏனைய இஸ்லாமிய பின்னணி விசுவாசிகளுக்கு நடந்த சம்பவங்களையும் அவள் அறிந்திருந்தபடியால் இப்படி பயந்தாள். அவளுடைய புதிய விசுவாசத்தில் மேலும் வளர வேண்டும் என்று ஞானஸ்நானம் எடுக்க ஆவல்கொண்டாள். நாங்கள் அவளுடன் இணைந்து ஞானஸ்நானத்தைக் குறித்துப் பேசி, எடுப்பதற்கு சரியான வேளைக்காக ஜெபித்தோம். அவள் தனது மாற்றத்தை குறித்து தன் குடும்பத்தாரிடம் சொல்வதற்கு சரியான வார்த்தைகளை அறிந்துகொள்ள தேவ வழிநடத்துதலுக்காகவும் ஞானத்துக்காகவும் ஜெபித்தோம். தன் சகோதர சகோதரிகளுக்கு கிறிஸ்துவை அறிய உதவுவது எப்படி என்று தீர்மானம் எடுக்க அவள் சிந்தித்திக்க ஆரம்பித்தாள்.

சொராயாவின் குடும்பம் இஸ்லாமிய கலாச்சாரத்தில் ஊறிய குடும்பமாகும். இவள் கிறிஸ்துவை பின்பற்ற எடுத்த தீர்மானம் அந்த குடும்பத்துக்கு வெட்கத்தை ஏற்படுத்திய செயலாகும். இதனை அவள் குடும்பத்தாரும் சமுதாயமும் அறியும் போது, அவள் சகோதரிகளுக்கு திருமணம் செய்துகொடுப்பதற்கும் தடையாக அமையும். இப்படியான காரணங்களால் அவள் தொடர்ந்தும் முஸ்லிமாகவே இருந்து அவளுடைய விசுவாசத்தை அவள் குடும்பத்தாருக்கு மறைத்து வைக்கவேண்டியுள்ளது.

ஒரு அரபு பழமொழி “உனக்கு நான் யார் என்பதை அறியவேண்டுமானால் நாங்கள் யார் என்று கேள்!” என்று சொல்கிறது. அநேக முஸ்லீம்கள் தங்கள் அடையாளத்துக்காக எழுந்து நிற்பதையும் தங்கள் குடும்பங்களுடன் இணைந்திருப்பதையும் அவதானிக்கும்போது இந்த பழமொழி அவர்கள் வாழ்வில் பிரதிபலிப்பதை அவதானிக்கலாம். குடும்பமும் சமுதாயமும் இஸ்லாமிய பாரம்பரியத்தை கொண்டதாகும்.

## நாம் எப்படி ஜெபிப்பது?

- உலகம் பல்வேறு மாற்றங்களை கண்டுவருகிறது. சோராயா போன்றவர்கள் தங்கள் சம்பிரதாய கலாச்சாரத்தையுடைய குடும்பங்களுக்கு விசுவாசத்தை புதிய வழிமுறைகளில் புரியவைக்க வேண்டும் என்று ஜெபிப்போம். இஸ்லாமிய பன்னணி விசுவாசிகளுக்கு உதவுகிற கிறிஸ்தவர்கள் உணர்வுபூர்வமாகவும் கரிசனையோடும் மழு ஆதரவையும் அவர்களுக்கு கொடுக்கவேண்டும் என்று ஜெபிப்போம்.

நாள் 23 18 ஜூன்

**கிழக்கு ஆபிரிக்கா**

# சூடானின் பஜா இன மக்கள்

அம்னா பிரகாசமான ஒரு நீல நிற வஸ்திரத்தை உடம்பையும் தலையையும் சுற்றி அணிந்திருந்தாள். தங்க மூக்குத்தியும் அணிந்திருந்த அவள் அமர்ந்து, தனலில் கோப்பி வறுத்துக்கொண்டிருந்தாள். தன் உணர்வுகளை ஒரு ரிதம் உலுக்கிக்கொண்டிருந்தது. 21 வயதான அம்னா தாயிம் அல் அரபில் வசிக்கின்றாள். இது மத்திய தரைக் கடற்கரை துறைமுக பகுதியில் ஏழ்மையான பஜா இன மக்கள் வாழும் பகுதியாகும்.

தென் எகிப்தின் பெரும் நிலப்பரப்பிலிந்து எரித்திரியாவின் மேற்கு தாழ்நிலங்கள் வரையில் 3 மில்லியன் பஜா இன மக்கள் வாழ்கிறார்கள். அம்னா செங்கடல் பகுதியிலுள்ள மலைகளில் அலைந்து திரியும் நாடோடி மக்களுடன் வளர்ந்தாள். அவளுக்கு 5 வயதாக இருக்கும் பொழுதே விருத்தசேதனம் செய்யப்பட்டாள். அதனால் ஏற்பட்ட பேரதிச்சியிலிருந்து அவள் இன்னும் குணமடையவில்லை. அவள் திருமணமாகி அவளுக்கு முஹம்மத் என்று ஒரு மகனும் இருக்கிறான். அவள் கணவர் ஹஸன் அரசியல் கைதியாக இருந்து விடுதலையாகியிருக்கிறான். ஆனால் அவனுக்குள்ள உயிர் ஆச்சுறுத்தலினால் தலைமறைவாகியிருக்கிறான். மனைவி அம்னாவுடன் போனில் பேசுவான். அவளுக்கு அனுப்புவதற்கு பணம் அவனிடமில்லை. ஆன்மீக பாதுகாப்பு தேடி அம்னா ஜின் மற்றும் அசுத்த ஆவிகளிடம் உதவிதேடும் கலப்படமான இஸ்லாத்தை பின்பற்றுகிறாள்.

அவளுடைய பழைய நாடோடி வாழ்க்கை அவள் வாஞ்சித்தசமாதானத்தை கொடுக்கவில்லை. சுவையான காப்பியை தயார் செய்துகொண்டு புழுதி நிறைந்த தெருவை பார்த்துக்கொண்டிருக்கிறாள். கண்ணீர் துளி அவள் கண்ணத்தில் விழ அதை மெதுவாக துடைத்துக்கொண்டாள். எனக்கு உதவுவார் யாரும் இல்லையா? என்னை மீட்டுக்கொள்ள யாரும் இல்லையா? என்று சிந்தித்துக்கொண்டிருக்கும்போது, அவள் மகன் அந்த அழுக்கான குடிசையில் விலையாடிக்கொண்டிருப்பதைக் கண்டு சுயநினைவுக்குத் திரும்பினாள்.

புதிய நாள் ஆரம்பமானது.



## நாம் எப்படி ஜெபிப்பது?

- பஜா இன மக்கள் பின்பற்றும் பழமைவாத இஸ்லாத்தின் அனுஷ்டானங்கள் மேலிருக்கும் பயத்திலிருந்து விடுபட ஜெபிப்போம்.
- எகிப்து சூடான் எரித்தியா நாடுகளிலிருக்கிற விசுவாசிகள் கிறிஸ்துவின் சுவிசேஷத்தை இந்த மக்களுடன் பகிர்ந்துகொள்ளவேண்டும் என்றும் நடைமுறை ரீதியான உதவிகளை செய்யவேண்டும் என்றும் மன்றாடுவோம்
- கடந்த 20 வருடங்களாக எழுத்துருவில் இல்லாத இவர்கள் மொழிகளில் பைபிள் மொழியாக்கம் செய்யப்பட்டு வருகிறது. அந்த பணி நிறைவடைந்த இவர்களுக்கான பூரண பைபிள் அவர்கள் மொழியில் கிடைக்க ஜெபிப்போம்.

நாள் 24 19 ஜுன்

மத்திய ஆசியா

# தாஜிகிஸ்தான் உஸ்பேக்கியர்

ஏழு வயது பிலால் வெட்கத்துடன் சிரித்துக்கொண்டு தன் நண்பர்களுடன் வீடுவீடாகச் சென்று பெருநாளுக்கான இனிப்புப் பண்டங்களை சேகரித்துக்கொண்டிருந்தான். கடந்த வாரம்தான் அவன் முதல் வருடத்தை ஆரம்பித்திருந்தான். அவனுடைய பாடசாலை சீருடை சிறியதாகவும் பழையதாகவும் இருந்தது. இன்னுமொரு பையனுக்கு பின்னாக தன் முகத்தை மறைத்துக்கொண்டிருந்தான். பிலாலை பற்றி சொல்வதென்றால் அவன் பெற்றோர் ஒன்றாக இணைந்து வாழ்ந்ததை அவன் பெரிதாக காணவில்லை. 5 வருடங்களுக்கு முன்பு அவன் தந்தை வேலை தேடி ரஷ்யா நாட்டுக்குச் சென்றவரிடமிருந்து இதுவரையில் எந்தவொரு செய்தியும் வெளிவரவில்லை. ஆனால் உறவினர்கள் பலரிடமிருந்து கிடைத்த செய்திகளால் அவர் இன்னும் உயிருடன்தான் இருக்கிறார் என்பது ஊர்ஜிதம். பொதுவாக உஸ்பேக்கியரை போன்று பிலாலின் குடும்பமும் அவன் தகப்பனாரின் பெற்றோரின் வீட்டிலேயே வாழ்ந்தனர். கணவர் திரும்பி வராததினால், பிலாலையும் அவன் இரண்டு சகோதரிகளையும் அழைத்துக்கொண்டு அவன் தாய் தன் பெற்றோர் வீட்டுக்கு வந்துவிட்டாள். அது அவர்களுக்கு மிகவும் சுமையாக இருந்தது. 2 வருடங்களுக்கு முன்பு பிலாலின் தாயாரும் வேலை தேடி ரஷ்யாவுக்குச் சென்றுவிட்டாள். அவளுக்கு ஒரு வேலையும் கிடைத்து தனது பெற்றோருக்கு பணமும் அனுப்பிக்கொண்டிருக்கிறாள்.



*அவன் பெற்றோர் ஒன்றாக இணைந்து வாழ்ந்ததை அவன் பெரிதாக காணவில்லை.*

பிலால் அவனுடைய இரு பாட்டன்மார்களின் வீடுகளிலும் மாறி மாறி இருந்தான். ஒரு சிறுவனுக்கு கிடைக்கவேண்டி சூழல் அவனுக்குக் கிடைக்கவில்லை. பெற்றோரின் பராமரிப்பில்லாமல் வளரும் உஸ்பெக் சிறுவர்களுக்கு பிலால் ஒரு உதாரணம் மட்டுமே!

முன்னால் மத்திய சோவியட்டின் ஆசிய மாநிலத்தின் மிகவும் ஏழ்மையான நாடு தாஜிகிஸ்தான் ஆகும். அனேகர் தங்கள் குடும்பத்தை பராமறிக்க முடியாமல் கஷ்டப்படுகின்றனர். இங்குள்ள அரைவாசிக்கும் அதிகமான ஆண்கள் வருடத்தின் அதிக நாட்கள் வேலைக்காக வெளிநாடுகளில் இருக்கிறார்கள். தாஜிகிஸ்தானின் உஸ்பெக்கியர் (25 வீதம்) பெரும்பான்மையானவர்கள் வெளிநாடுகளில் வேலை செய்கின்றனர். மிகவும் சொற்பனானவர்களே உள்நாட்டு தொழில்களில் தங்கியிருக்கின்றனர்.

## நாம் எப்படி ஜெபிப்பது?

- பிலால் போன்ற சிறுவர்கள் பிதாவாகிய தேவனின் அன்பை குறித்த அற்புத செய்தியை செவிமடுக்கவேண்டும் என்று ஜெபியுங்கள்.
- வேலை தேடி வெளிநாடு சென்றுள்ள பெற்றோர் அந்த தேசங்களில் கிறிஸ்துவை பின்பற்றுகிறவர்களுக்கூடாக கிறிஸ்து இடைபடவேண்டும் என்று ஜெபியுங்கள்.
- தாஜிகிஸ்தானில் ஞானமுள்ள தலைமைத்துவத்துக்காக ஜெபியுங்கள்.
- பொருளாதார ஸ்தீர தன்மை உருவானால் வேலைவாய்ப்புத் தேடி வெளிநாடு செல்லாமல் உள்நாட்டில் குடும்பத்துடன் வாழும் சூழல் உருவாகும்.

நாள் 25 20 ஜூன்

மத்திய கிழக்கு

# சவுதி அரேபியாவின் மக்கள்

பல வருடங்களுக்கு முன்பு ஒரு அமெரிக்க பதின்வயதுடைய ஒரு சிறுவன் அவனுடைய சவுதி நண்பனுக்கு ஒரு பைபிளை கொடுத்தான். அதனை அவன் தன் வீட்டில் வைத்திருந்தாலும் யாரும் அதனை வாசிக்கவில்லை. ஒரு நாள் அவன் தகப்பன் அஹமத் அதனை கண்டு வாசிக்கத் தொடங்கினார். சத்தியத்தை வெளிப்படுத்துமாறு இறைவனை வேண்டிக்கொண்டு இன்ஜீலை (புதிய ஏற்பாட்டை) வாசிக்கும் பொழுது அது இறைவனுடைய வார்த்தை என்பது அவருடைய உள்ளத்திற்குத் தெளிவாத் தோன்றியது. அவர் தன் வாழ்நாள் முழுவதும் தேடிக்கொண்டிருந்த சத்தியம் இதுதான் என்பதை புரிந்துக்கொண்டார். அஹமத் முழு வேதாகமத்தையும் இரண்டு முறைகள் வாசித்து முடித்தார். பிறகு இந்த காரியங்களைக் குறித்து தன் மனைவியுடன் கதைத்து தெளிவுபடுத்தினார். மதம்மாறினால் அவரைவிட்டு பிரிந்துவிடுவதாக மனைவி அச்சுறுத்தினாள்.

சவுதி அரேபியாவில் பழைய விசுவாசத்தைவிட்டு விலகுவதென்பது அவ்வளவு இலேசான காரியமல்ல. கிறிஸ்துவை பின்பற்றுவதற்காக ஒரு கிரயத்தை செலுத்த ஆயத்தமாக இருக்கவேண்டும். யாராவது ஒருவர் இஸ்லாத்தை விட்டு வெளியேறினால் அவரை சிறைபிடித்து அடிப்பதற்கோ கொலைசெய்வதற்கோ அரசாங்கத்துக்கு அதிகாரம் உள்ளது. அதுமட்டுமல்ல, அந்த நபர் குடும்பத்தின் கௌரவத்தை குறைத்துவிட்டார் என்ற குற்றத்திற்காக குடும்பத்திலிருந்து விலக்கி வைப்பார்கள் அல்லது கொலைசெய்வார்கள்.இஸ்லாத்தின் பிறப்பிடவும் தீவிரமான பழங்குடி விசுவாசமும் கடுமையான மதச் சட்டங்களுமுள்ள சவுதி அரேபியா போன்ற ஒரு தேசத்தில் நீங்கள் இருந்தால் உங்கள் விசுவாசம் எவ்வளவு வித்தியாசமாக இருக்கும் என்று உங்களை ஆராய்ந்து பார்க்க உட்சாகப்படுத்துகின்றது.

இவற்றால் மக்கள் தேவனை அறியும் வழிகளையோ ஆவியானவரின் செயலையோ யாராலும் தடுக்கமுடியாது. அநேகர் சவுதி கலாச்சாரத்திற்குள் இயேசுவை பின்பற்றும் வழிகளை கண்டுபிடித்து பின்பற்றுகின்றனர்.

## நாம் எப்படி ஜெபிப்பது?

- சவுதியில் மதச் சுதந்திரத்தை அதிகரிக்க சட்டங்கள் மாற்றப்படவேண்டும் என்று, தலைவர்களுக்காகவும் சட்டம் இயற்றுகிறவர்களுக்காகவும் ஜெபிப்போம். சவுதியின் ஒவ்வொரு பெண்ணுக்கும் ஒரு ஆண் பாதுகாவலனாக உள்ளான். - தகப்பன் அல்லது கணவன். சிலசமயம் சகோதரன் அல்லது மகன் - அவர்களே பெண்களை குறித்த தீர்மானங்களை எடுக்கிறார்கள். பெண்கள் தங்கள் சமவுரிமைக்காகவும் சுதந்திரத்திற்காகவும் போராடவேண்டும் என்று ஜெபிப்போம். சவுதி ஆண்கள் கலாச்சாரத்தாலும் பண்பாட்டாலும் வேறுபட்டாலும் அவர்களும் மற்றைய ஆண்களைபோலத்தான். உங்கள் குடும்பத்திலுள்ள ஆண்களுக்கு ஜெபிப்பது போல் அவர்களுக்கும் ஜெபியுங்கள்.



*சவுதி அரேபியாவில் பழைய விசுவாசத்தைவிட்டு விலகுவதென்பது அவ்வளவு இலேசான காரியமல்ல.*

நாள் 26 21 ஜூன்

உலகளாவிய கரிசனைகள்

# விதியின் இரவு

குர்ஆன் முஹம்மது நபிக்கு ரமழான் மாதத்தின் கடைசி பத்தில் ஒற்றையான ஒரு நாளில் இறக்கப்பட்டதாக சொல்லப்படுகிறது. அனேகமானவர்கள் அது நோன்பு 27 இல் என்று சொல்கின்றனர். (ரமளான் மாதத்தின் 26ம் நாள் நோன்பு திறந்ததிலிருந்து அந்த இரவு 27ம் நாள் இரவாக கருதப்படும்.)
அடியார்கள் கடைசி பத்து நாட்களில் அதிக நண்மைகளை தேடிக்கொள்ளவேண்டும் என்பதற்காக கடவுள் அந்த நாளை தெளிவாக குறிப்பிடவில்லை.

*லைலதுல் கத்ர் இரவு கட்டளையின் இரவு, வல்லமையின் இரவு, சங்கைமிகு இரவு, போன்ற பெயர்களாலும் அழைக்கப்படுகிறது.*

லைலதுல் கத்ரை சுற்றி பல நம்பிக்கைகளும் பாரம்பரியங்களும் உள்ளது. இந்த நாளில்தான் அடுத்த வருடத்துக்கான விதி நிர்ணயிக்கப்படுகிறது என்று சில முஸ்லீம்கள் நம்புகிறார்கள். ஆகவே இந்த இரவில் செய்யும் வணக்கங்கள் மிகவும் வல்லமையுள்ளது. பாவங்கள் மன்னிக்கப்படுகிறது. கடவுளின் ஆசீர்வாதமும் கிருபையும் அதிகம் கிடைக்கிறது.
கடவுளை கிட்டிச் சேர இதுவே சிறந்த இரவு. இந்த இரவில் இஸ்லாமியருக்கு இயேசு வெளிப்பட்ட அநேக சான்றுகள் உள்ளன. இந்த கடைசி பத்து நாட்களில் முஸ்லீம்களின் வணக்கங்களும் குர்ஆன் ஓதுதலும் அதிகரிக்கின்றது.

சிலர் இந்த நாட்களில் பள்ளிவாசலிலேயே தங்கி வணக்க வழிபாடுகளில் ஈடுபடுவார்கள். இதற்கூடாக கூடுதலான தெய்வீக வல்லமையை எதிர்பார்ப்பார்கள்.

## நாம் எப்படி ஜெபிப்பது?

- உலக முழுவதிலுமுள்ள முஸ்லீம் குடும்பங்கள் இந்த லைலதுல் கத்ருடைய இரவிலே தேவ பிரசன்னத்தை பெற்று விசேட விழிப்புணர்வு ஏற்பட வேண்டும் என்று ஜெபிப்போம்.
- சில குறிப்பிட்ட இடங்களில் அதிக தேவைகளுடன் உள்ள முஸ்லீம்களின் தேவைகள் சந்திக்கப்படவேண்டும் என்று ஜெபிப்போம்.
- இறை வெளிப்பாட்டை நாடுகிறவர்களுக்கு இந்த இரவில் பரிசுத்த ஆவியானவர் தரிசனத்தை கொடுக்கவேண்டும் என்று ஜெபிப்போம்.

*கடவுளை கிட்டிச் சேர இதுவே சிறந்த இரவு.*



நாள் 21 22 ஜுன்

இலங்கை

# நாங்கள் எந்த இனத்திற்குச் சொந்தம்?

இலங்கை இஸ்லாமிய குடும்ப அமைப்பும் சர்வதேச இஸ்லாமிய குடும்ப அமைப்பிலிருந்து வேறுபட்டதல்ல. சிலர் கூட்டுக் குடும்பங்களாகவும் சில பெற்றோர் தங்கள் அனைத்து பிள்ளைகளுக்கும் ஒரே தோட்டத்தில் தனித் தனி வீடுகளை கட்டிக்கொடுத்து தங்கள் பக்கத்தில் வைத்து அழகுபார்ப்பதையும் அவதானிக்கலாம். பல குடும்பங்களின் இந்த ஆசைகளுக்கு வறுமை தடையாக அமைந்துவிடுகின்றது.

இலங்கையின் இஸ்லாமியர் கிறிஸ்துவை பின்பற்றும் வீதம் சிறிது சிறிதாக அதிகரித்துக்கொண்டே வருகின்றது. பகிரங்கமாக இஸ்லாத்தை விட்டு வெளியேறுகிறவர்களும் தங்கள் வெளியேற்றத்துக்கான காரணத்தை பகிரங்கமாக அறிவிக்கும் சூழல் உருவாகியுள்ளது.

ஒரு குடும்பத்தில் ஒருவர் கிறிஸ்துவை பின்பற்றும் போது, சிலவேளைகளில் வீட்டைவிட்டு வெளியேறவேண்டி ஏற்படுகிறது. பிறகு அவர் ஒரு கிறிஸ்தவரை திருமணம் செய்து முற்றும் முழுதுமாக கிறிஸ்தவராக வாழ்ந்து விடுகிறார். குடும்பமாக இரட்சிக்கப்பட்டவர்கள் தொடர்ந்தும் தங்கள் பழைய முஸ்லீம் கலாச்சாரத்திலேயே வாழ்கிறார்கள்.

*இந்த இரண்டு சாராரினதும் அடுத்த தலைமுறையினர் தங்களுடைய அடையாளத்தைக்குறித்து கேள்வியெழுப்புகின்றனர்.*

*இலங்கையில் பொதுவாக தமிழ், முஸ்லிம், சிங்களம் என்பது மூன்று இனங்களுள்ளன. தந்தை முஸ்லிமாகவும் தாய் சிங்களமாகவும் இருந்தால் அவர்கள் குழந்தை முஸ்லிம்தான். இவர்கள் கிறிஸ்துவை பின்பற்றுவதால் தங்களை கிறிஸ்தவர்கள் என்று அடையாளப்படுத்துவார்கள். ஆனால் கிறிஸ்தவம் என்பது மதமேயன்றி இனமல்ல. இலங்கை கிறிஸ்தவர்கள் தமிழ் கிறிஸ்தவர்கள் என்றும் சிங்கள கிறிஸ்தவர்கள் என்றும் உள்ளனர். அவர்களால் முஸ்லீம் கிறிஸ்தவர்கள் என்ற சமுதாயத்தை ஏற்க முடியாமல் உள்ளது.*

*குடும்பமாக கிறிஸ்துவை ஏற்று முஸ்லீம் கலாச்சாரத்திலேயே வாழ்கின்ற விசுவாசிகள் தங்கள் பிள்ளைகளுக்கு திருமணம் செய்துகொடுக்கும்போது ஒரு சிக்கலை சந்திக்கின்றனர். அதே பின்னணியை சேர்ந்த மணமகனையோ மணமகளையோ கண்டுபிடிப்பது அரிதான காரியம்! குடும்ப கௌரவம், விசுவாசம் இரண்டுக்கும் மத்தியில் ஒரு போராட்டம் நடக்கிறது. பலர் இந்த சமயத்தில் விசுவாசத்தைவிடவும் குடும்ப கௌரவத்துக்கும் உறவினவர்களின் உதவி ஒத்தாசைகளுக்கும் முக்கியத்துவம் கொடுத்து, தங்கள் பிள்ளைகளை இயேசுவை பின்பற்றாத ஒரு முஸ்லீமுக்கு திருமணம் செய்து கொடுத்துவிடுகின்றார்கள்.*

## நாம் எப்படி ஜெபிப்பது?

- விசுவாச வாழ்க்கையை விட்டு மீண்டும் இஸ்லாத்துக்குள் செல்லத்தூண்டும் இஸ்லாமிய பின்னணி விசுவாசிகளின் வறுமை நீங்க ஜெபியுங்கள்.
- திருமன வயதையடைந்த இஸ்லாமிய பின்னணி விசுவாசிகளுக்கு தேவ பயமுள்ள துணைகள் கிடைக்கவேண்டும் என்று ஜெபியுங்கள்.
- இலங்கை கிறிஸ்தவர்கள் இஸ்லாமிய பின்னணி விசுவாசிகளின் சூழ்நிலையை புரிந்துகொண்டு அவர்களை விமர்சிக்காமல் விசுவாசத்தில் இன்னும் பலப்படவேண்டிய உதவிகளை செய்ய முன்வரவேண்டும் என்று ஜெபியுங்கள்.

# நாள் 28 23 ஜூன்

மேற்கு ஆபிரிக்கா

# வட கானாவின் கொன்ஜா மக்கள்

310,000 கொன்ஜா மக்கள் கானாவின் வடபிராந்தியத்தில் வாழ்கின்றார்கள். கி.பி 1600 களில் இந்த பகுதி இஸ்லாமிய ஆதிக்கத்தின் கீழ் வந்தவுடன் கொன்ஜா பேரரசு உருவானது. ஆனால் கடந்த சகாப்தங்களிலேயே இப்படி அறியப்பட்டது. இன்றைய நாட்களில் "நான் ஒரு கொன்ஜாவானேன் என்றால் நான் ஒரு முஸ்லீம் ஆனேன்" என்று பொருள். ஆனாலும் இன்றும் பெரும்பான்மையான கொன்ஜாக்கள் தங்கள் பழைய கடவுள்களையும் வணக்க வழிபாடுகளையும் பின்பற்றுகின்றனர். அனேகமான குடும்பங்கள் வீட்டுத் தொகுதிகளில் வாழ்கிறார்கள். அதில் 3 முதல் 10 வரையிலான அறைகள் இருக்கும். ஒரு வீட்டுத்தொகுதியில் ஒரு ஆண்மகனும் அவன் மனைவிமாரும் திருமணமாகாத குழந்தைகளும் வாழ்கிறார்கள். ஒரு ஆண் மகன் திருமணம் செய்யவேண்டுமானால் கட்டாயமாக ஒரு வீட்டுத்தொகுதியை நிர்மாணித்து, அதில்தான் அவன் புதிய வாழ்க்கையை ஆரம்பிக்கவேண்டும். ஆனாலும் குடும்ப பிரச்சினைகளில் தன் தகப்பன் வீட்டோடு கலந்தாலோசித்து முடிவுகள் எடுக்கப்படும். விசுவாசம் போன்ற முக்கிய காரியங்களில் குடும்ப தலையீடு அதிகமாக இருக்கும். கிறிஸ்துவை பின்பற்ற தீர்மானித்தவர்கள் பலவிதமான மட்டத்திலிருந்து துன்புறுத்தல்களை சந்திக்கின்றனர். உதாரணமாக:

*விசுவாசம் போன்ற முக்கிய காரியங்களில் குடும்ப தலையீடு அதிகமாக இருக்கும்.*

- ஹனீபாவும் மூஸாவும் ஒன்றுவிட்ட சகோதரர்கள் சிறு வயதிலிருந்தே நல்ல நண்பர்களும்கூட. எப்பொழுதும் ஒன்றாகவே இருப்பார்கள். ஹனீபா கிறிஸ்துவை ஏற்றுக்கொண்டவுடன் மூஸாவின் தந்தையும் சகோதரர்களும் ஹனீபாவுடன் சேர்ந்து சாப்பிடவும் கூடாது என்று அவனை தடுத்தார்கள். காரணம் அவர்கள் பார்வையில் ஹனீபா அசுத்தமாகிவிட்டான்.
- செய்யத் கிறிஸ்தவனானவுடன் அவன் தகப்பனால் துப்பாக்கி முனையில் அறையில் அடைக்கப்பட்டான். ஒருவாறு ஜன்னல்வழியாக தப்பித்துவிட்டான்.
- அஷ்தா தனது 4 குழந்தைகளுடன் அவள் கணவனை விவாகரத்து செய்யுமாறு அவள் குடும்பத்தால் வற்புறுத்தப்படுகின்றாள். காரணம் திருமணத்தின் பின் அவள் கணவன் கிறிஸ்துவை விசுவாசிக்க ஆரம்பித்துவிட்டான்.

## நாம் எப்படி ஜெபிப்பது?

- கொன்ஜா விசுவாசிகள் குடும்பத்தை விட்டுப் பிரியாமல் குடும்பத்தில் இருந்துகொண்டே தங்கள் குடும்பத்தாருக்கு சுவிசேஷத்தை அறிவிப்பது எப்படி என்று புரிந்துகொள்ளவேண்டும் என்று ஜெபியுங்கள்.
- கானாவிலேயே படிப்பறிவு குறைந்தவர்கள் கொன்ஜாக்களாகும். இவர்களுக்கு பரிபூரண எழுத்தறிவை கொடுப்பதற்காக நாம் ஆயத்தம் செய்துகொண்டிருக்கும் நிகழ்ச்சிகளுக்காக ஜெபியுங்கள்.
- ஒருவர் கிறிஸ்துவின் செய்திக்கு உள்ளத்தை திறப்பதற்கு தடையாகவுள்ள குடும்ப தலையீடுகளுக்கு எதிராக ஜெபியுங்கள்.



நாள் 29 24 ஜூன்

தென் கிழக்காசியா

# இந்தோனேஷியாவின் கொமரிங் மக்கள்



கொமரிங் மக்கள் தென் சுமத்ராவிலே வாழ்கிறார்கள். அது தென் இன்தோனேஷிய சுமத்ரா தீவுகளில் ஒன்றான ஸ்வாம்பியிலாகும். அரிசி உற்பத்தி அவர்களின் பிரதான வாழ்வாதாரமாக காணப்படுகிறது. அவர்களின் வீடுகள் அனேகமாக கொமரிங் ஆற்றங்கரையில் கட்டப்பட்டுள்ளன. சில வீடுகள் உயரமான கம்புகள் மேல் கட்டப்பட்டுள்ளன.

அனேகமான கொமரிங் மக்கள் விவசாயிகளும் மீன்பிடிப்பவர்களுமாகும். சிலர் சிவப்பு தங்க நிற கை வேலைப்பாடுகள் உள்ள உறைகளை பலகை தலபாடங்களுக்கு உற்பத்தி செய்கிறார்கள். அவர்களில் ஒரு நெருக்கமாக பின்னப்பட்ட குழுவினர் உள்ளனர். அவர்கள் தங்கள் குடும்பங்களை போஷிப்பதிலும் முதியோரை பராமரிப்பதிலும் சமுதாயத்தை பாதுகாப்பதிலும் கவனம் செலுத்துகின்றனர். இங்கு வறுமை தலைவிரித்தாடுகிறது. யாராவது தங்கள் குடும்பதை நிலைமையை உயர்த்த முயற்சித்தால் அவர்கள் வெற்றிக்கு வறட்சி, காடழிப்பு, மாசுபட்ட நீர் என்பன தடையாக அமைகிறது.

இங்கு மலேசிய வர்த்தகர்களால் இஸ்லாம் அறிமுகம் செய்யப்பட்டது. இன்றும் அனேக கோமரிங் மக்கள் பள்ளிவாசலுக்குச் செல்வதில்லை. அவர்களின் கலாச்சார அடையாளத்தையும் கலப்பு இஸ்லாத்தையும் பின்பற்றுகின்றனர். நேருக்கு நேர் பேசாமல், வெட்கக் கலாச்சாரத்தை கொண்ட இந்தோனேஷியர்களில் இவர்கள் வித்தியாசமானவர்கள். முகத்துக்கு நேராக பேசுகின்ற வெளிப்படையான மக்கள்.

இவர்கள் மத்தியில் ஊழியம் செய்கிற கிறிஸ்தவர்கள், இவர்களுடைய உபசரிப்பையும், மற்றவர்களை வரவேற்பதையும், நேர்மையையும், சார்ந்திருப்பதையும் கிறிஸ்துவின் வழியை கற்றுக்கொள்வதற்கு உள்ளம் திறந்தவர்களாக இருப்பதையும் கண்டுக்கொண்டார்கள்.

## நாம் எப்படி ஜெபிப்பது?

- தங்கள் வறுமையிலிருந்து மீழ்வதற்காக கல்வி கற்பதற்கு சில கோமரிங் சிறுவர்கள் ஆர்வம் காட்டுகின்றனர். அதற்கான வழிகள் திறக்கப்படவும் அவர்கள் பெற்றோருக்கு பிள்ளைகளை கற்பிக்க வசதிகளும் உதவிகளும் கிடைக்கவேண்டும் என்றும் ஜெபிப்போம்.
- கோமரிங் மக்களுடன் இணைந்து அவர்களுடைய விவசாயங்களுக்கு உதவும் குழுக்களுக்காக ஜெபிப்போம்.
- இவர்கள் மத்தியில் ஊழியம் செய்கின்ற கிறிஸ்தவர்கள் அவர்கள் வழிமுறைகளையே பின்பற்றி, விசுவாசத்துக்குள் வருகிறவர்களை வழிநடாத்தவேண்டும் என்று ஜெபிப்போம்.

*கிறிஸ்துவின் வழியை கற்றுக்கொள்வதற்கு உள்ளம் திறந்தவர்களாக இருக்கிறார்கள்.*

# நாள் 30 25 ஜூன்

## ஐரோப்பா/உலகளாவிய கரிசனைகள்
## பிரான்ஸ்: உங்களை துன்புறுத்துகிறவர்களுக்காக ஜெபியுங்கள்

அண்மைய காலங்களில், பிரான்ஸ் அநேக பயங்கவாத தாக்குதல்களுக்குள்ளானது. சார்ளி ஹேப்டோ சஞ்சிகை ஊழியர்களை குறிவைத்து தாக்கியது. அல்லது ஒரு அங்காடியில் வாடிக்கையாளர்களையும் ஒரு ரொக் இசை நிகழ்ச்சியில் பங்குபற்றியோரை குறிவைத்து தாக்கியது. ஆராதனை நடத்திக்கொண்டிருந்த கத்தோலிக்க வயோதிப பாதிரியாரை சுட்டுக்கொண்டது என்பன திட்டமிட்ட தாக்குதல்களாகும். ஏனையவை கண்மூடித்தனமான தாக்குதல்கள்.

கிறிஸ்தவர்களுடைய உயிர்களைபோலவே முஸ்லீம்களுடைய உயிர்களும் பறிக்கப்படுகிறது. ஒரு டிரக் வண்டியிலிருந்து பொழிந்த தோட்டாக்களால் நடைப்பாதை உணவகங்களிலிருந்த அநேக அப்பாவிகளின் உயிர்கள் பறிக்கப்பட்டது. இப்படியான தாக்குதல்களால் ஆழமான வெறுப்பும் அதிர்சியும் உருவாகவில்லை என்று சொன்னால் நான் பொய் சொல்கிறேன்.

முதலாவது, ஒற்றுமையாகவும் தேசிய உணர்வுடனும் வாழ்கின்ற தீவிர போக்கற்ற முஸ்லீம்கள் பிரான்ஸில் வாழ்ந்துக்கொண்டிருக்கிறார்கள் என்பதை நாம் நினைவில் கொள்ளவேண்டும். எது எப்படியோ, தொடர் தாக்குதல்களினால் பிரஞ்சு மக்கள் தங்கள் சகிப்புத்தன்மையை இழந்துகொண்டிருக்கிறார்கள். அது பயங்கரவாதிகளுக்கு தங்கள் நோக்கத்தை நிறைவேற்ற முடியுமாக அமைகிறது.

பிரான்ஸிலுள்ள கிறிஸ்தவ தலைவர்கள் “முஸ்லீம்களை அண்டி வாழ்கின்ற கிறிஸ்தவர்கள் மத்தேயு 5:44 இல் இயேசு சொன்ன போதனைக்கு திரும்பவேண்டும்” என்று நமக்கு நினைவூட்டுகின்றனர். “உங்கள் சத்துருக்களைச் சிநேகியுங்கள்; உங்களைச் சபிக்கிறவர்களை ஆசீர்வதியுங்கள்; உங்களைப் பகைக்கிறவர்களுக்கு நன்மை செய்யுங்கள்; உங்களை நிந்திக்கிறவர்களுக்காகவும் உங்களைத் துன்பப்படுத்துகிறவர்களுக்காகவும் ஜெபம் பண்ணுங்கள்.”

வெறுப்புடன் அன்பு செய்வதே இங்குள்ள சவாலாகும். காட்டுவாசி பெண்களோ, வட ஆபிக்க ஆண்களோ பாதையில் எம்மை கடந்துச் செல்லும்போது எங்கள் உள்ளத்தில் அவர்களை வெறுக்காமல் நேசிக்கிறோம். நாங்கள் குழப்பத்தில் இருந்தால், தீவிரவாதத்தை எதிர்க்கின்ற அநேக முஸ்லீம்கள் எம் மத்தியில் இருக்கிறார்கள். அவர்கள் எம்மைவிடவும் குழப்பத்தில் உள்ளார்கள். நேசிப்பதென்பது அவர்களை புரிந்துகொண்டு, அவர்கள் உள்ளங்கள் திறக்கப்பட ஜெபிப்பதாகும். பிரான்ஸிலே 4.5 மில்லியன் முஸ்லீம்கள் வாழ்கிறார்கள். தேவன் அவர்களை எங்கள் கதவண்டைக்கு கொண்டுவந்திருக்கிறார்.

### நாம் எப்படி ஜெபிப்பது?

- “உங்களை நேசிக்கிறவர்களையே நீங்களும் நேசித்தில் அதில் என்ன பலன்?” என்று இயேசு கூறினார். தீவிரவாதிகளின் தாக்குதலுக்கு முகம் கொடுத்த அனைத்து பிரெஞ்சு மக்களும் கிறிஸ்துவின் போதனையை பின்பற்றி எதிரிகளை நேசிக்கவேண்டும் என்று ஜெபிப்போம்.

தீவிரவாத செயல்களில் ஈடுபட்டுள்ள, ஈடுபட சிந்தித்துக்கொண்டிருக்கின்ற முஸ்லீம்களுக்காக மன்றாடுவோம். அதுவே இந்த கையேட்டின் நோக்கமும்கூட.

வன்முறைகளால் பாதிக்கப்பட்டவர்களுக்கும் நாட்டு தலைவர்மாறுக்கும் தேவ ஞானம் கிடைக்க மன்றாடுவோம். ஞானத்தால் வழிநடத்தும் தலைவர்கள் எமக்குத் தேவை.

*மில்லியன் முஸ்லீம்கள் வாழ்கிறார்கள். தேவன் அவர்களை எங்கள் கதவண்டைக்கு கொண்டுவந்திருக்கிறார்.*



# அடுத்து நான் என்ன செய்வேன்?

ரமளான் முடிந்துவிட்டது, ஆனாலும் உங்கள் முஸ்லீம் நண்பர்களுக்கு வாழ்துதல்களையும் ஆசீவாதங்களையும் கூறுவதை மறந்துவிடவேண்டாம்! வருடம் முழுவதும் அவர்களுக்காக ஜெபிக்கலாம்!

30 நாள் ஜெபகுறிப்பு முகபுத்தக பக்கத்தில் அநேக ஜெப குறிப்புகளை உங்களால் பெற்றுக்கொள்ள முடியும். —
**www.facebook.com/30daysprayer**

கடைசியாக முஸ்லீம் உலகுக்கான 30 நாட்கள் ஜெப கையேட்டு தயாரிப்பில் ஈடுபட்டுள்ள தன்னார்வ ஊழியர்கள் வரும் வருடங்களிலும் இந்த ஊழியத்தை செவ்வனே செய்ய உங்கள் உதவிகளை கொடுத்து உதவலாம்.

**To donate, visit**
**http://pray30days.org/about/donate/**

உங்கள் ஜெபத்துக்கு நன்றி!

